சிவமயம்.

# இராமச் சந்திரபுரம்

தி. நா. நாச்சியப்ப செட்டியார்



1926

# முன்னுரை.

நீர்சூழ் நிலவுலகில் காணப்பெறும் பிறப்பின் வகைகள் பலவாம். அப்பிறப்புகளில் சிறப்புடையது மக்கட்பிறப்பு என்று கூறுவர். பொதுவாக மக்கட் பிறப்பு சிறப்புடையதென்று கூறப்படுவதை உலக வழக்கில் நாம் காண்போமாயினும், மக்களாகத் தோன்றினோரனைவரும் சிறப்புடையவர்களாக இருக்கக் காண்கின்றோமில்லை. மக்கள் உருவில் மக்கள் இருக்கவுங் காண்கின்றோம். மக்கள் உருவில் மாக்கள் இருக்கவுங் காண்கின்றோம். இவ் வேற்றுமையை எவ்வாற்றால் உணரலாம்? உடலினாலா? நிறத்தாலா? செல்வத்தாலா? புதல்வர் பெருக்கத்தாலா? அன்று, அன்று. அவ்வேற்றுமையைப் புலப்படுத்தும் அறிகுறியாவது அறிவுடைமையேயாகும். அறிவுடைமைக்கு அடையாளம் நலம் தீங்கு உணர்தலும், அன்பும், அருளுமாகும். செய்வதற்குத் தக்கவை இவையென்றும் செய்வதற்குத் தகாதவை இவையென்றும் உணர்ந்து, தகாதனவற்றை ஒழித்தலே மக்களில் மேம்பட்டாரியல்பு.

"தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்தள
மக்களும் விலங்கே." * * * கம்பர்.

அன்பு அருள் முதலிய நற்குணங்களை வளர்ப்பதற்கு இன்றியமையாதிருக்கும் வழிகளாவன: அத்தகைய குணங்களை யுடையார்களது வரலாறுகளைப் படித்தலும் கேட்டலுமாம். வரலாற்று நூல்கள் முத்திறப்படும்: ஒருவன் தனது வரலாற்றைத் தானே

எழுதி வெளியிடுதல் ஒன்றும். மற்றொன்று தனது வாழ்க்கைக் குறிப்புகளைப் பிறர் ஒருவரிடத்திற் கூறி அவரைக்கொண்டு தனது வரலாற்றை எழுதி வெளியிடுதலாம். பிறிதொரு முறை, ஒருவர் இறந்த பின்னர் அவர் உலகிற்குச் செய்த உதவிகளை நினைந்து, அறிஞர்கள் அவர் வரலாற்றை எழுதி வெளியிடுதலாம்.

வரலாற்று நூல்கள் நம் நாட்டில் மிகுதியாய் வரையப்படவில்லை. மேல்நாடுகளில் நாளுக்குநாள் அத்தகைய நூல்கள் வரையப்பெறுகின்றன. வீரர்கள் வரலாறுகளைத் தெரிவிக்கும் நூல்கள் பலவுள. அந் நாடுகளில் ஆட்சி செலுத்திய மன்னர்களின் மாட்சியைப் புலப்படுத்தும் நூல்கள் பலவுள. கல்வியாளர்களைப்பற்றிக் கூறும் நூல்கள் பலவுள. தமக்கு என்றுவாழாது பிறர்க்கு என்று வாழ்ந்த பெருந் தகையாளர்களைப்பற்றிப் பேசும் நூல்கள் பலவுள.

சிவபெருமானுக்குத் தொண்டுபுரிந்த நாயன்மார்களைப்பற்றிக் கூறுந் திருத்தொண்டர் புராணம், திருமாலுக்கு அடிமை செய்த ஆழ்வார்களைப்பற்றிக் கூறும் குருபரம்பரை முதலாகவுள்ள சில நூல்களில் பெரியார்களது வரலாறுகள் முற்காலத்தில் வரையப் பெற்றிருக்கின்றன. மிகச் சமீபகாலத்தில் தென் னாட்டு சிரேஷ்டர்கள் என்ற ஒருநூல் வெளிவந்தது. அதில் ஆசிரியர் அரங்கநாத முதலியார் அவர்கள், சென்னை உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாகிய முத்து சாமி ஐயர் அவர்கள், தற்காலம் அங்கிலேயிலுள்ள திரு T. V. குமாரசாமி சாஸ்திரியார் அவர்களின் பாட்டனாராகிய C. V. அரங்கநாத சாஸ்திரியார் அவர்கள்,

முதலாகவுள்ள பல பெரியார்களுடைய வரலாறுகளை மிகச் சுருக்கமாய் அந்நூலாசிரியர் எழுதியுள்ளார்.

பெரியார்களுடைய வரலாறுகளைப் பலகாலும் படிப்பதால் பயனுண்டாகும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை, அவர்களுடைய கல்வி, அறிவு, ஒழுக்கம் உழைப்பு, ஊக்கம் முதலியனவாகவுள்ள உயர்குணங் களெல்லாம், படிப்பவர்கள் மனதில் பதியும். அங்ஙனம் பதிவதால் அவர்களும் அச்சீரிய குணங் களைப்பெற முயலுகின்றார்கள்; அவ்வாறே நாளும் முயன்று நற்குணத்திலுயர்ந்து, நலம் பல புரிந்து, நல்லிசையை இவ்வுலகில் நாட்டுகின்றார்கள். உயர்ந் தோர்களுடைய வரலாறுகளைப் புலப்படுத்தும் நூல் கள், படிப்பவர்களுடைய மனத்தளர்ச்சியை ஒழிக் கும்; சோர்வைப்போக்கிச் சுகத்தைக் கொடுக்கும்; ஊக்கங்குன்றியவர்கட்கு ஊக்கங்கொடுக்கும்.

முற்காலத்திலிருந்தவர்கள் வரலாறுகளைவிடப் பிற் காலத்தில் நம் கண்முன்னிருந்தவர்கள் வரலாறுகள் மனதில் மிகவும் பதியும் நிலையிலிருக்கின்றன.

அத்தகைய வரலாறுகளுள் முதலாவதாக இருப் பது நமது திரு. தீ. நா. நாச்சியப்பசெட்டியார் அவர்கள் வரலாறு ஆகும். இவர்களது வரலாற்றைப் படித்துப்பார்த்தால் படிப்பவர்கள் உள்ளத்தில் பல ஒண்பொருள்கள் பதியும் என்பது சரதமன்றோ? திரு. செட்டியாரவர்கள் ஊக்கத்தையும், உழைப்பை யும், நல்லொழுக்கத்தையும், அற முயற்சிகளையும், திருத்தொண்டின் திறத்தையும் உற்றுநோக்கினால் யார் மனதில்தான் ஊக்கம் உண்டாகாது? யார்தான் அறநெறியில் ஈடுபடார்?

இத்தகைய அரிய வரலாற்றை வெளிவரச் செய்த பரமோபகாரியாவர் திருக்கோவலூராதீனத்துத் தலைவராம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் திருமடாலயத்து ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசார்ய சுவாமிகள் ஆவார்கள். அவர்களைப்பற்றித் தமிழ் உலகம் நன்கு அறியும். அன்புடையார் வரலாற்றை வெளியிடுவதற்குத் தகுதியுடையவர்கள், அருளுடையவர்களே. ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் தமிழ் உலகத்திற்கும் சைவ உலகத்திற்கும் செய்துவரும் நன்றி இவ்வளவிற்றென்று கூறற்பாலதோ?

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் மொழிக்குத் துணையாகக் கொண்டது 'முருகா' வெனு நாமமே. அவர்கள் கடிந்தது சினத்தையே. கைக்கொண்டது பொறுமையையே. பேசுவது இன்சொல்லையே. விழைந்தது முக்கண்ணன் புதல்வன் முருகன் இணையடியையே. இத்தகைய உயர்சிறப்புகள் வாய்ந்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் திருவடிகள் என்றென்றும் வாழ்க.

'வித்தும் முதலும் வேறின்றே' என்றபடி திரு தீ. நா. நாச்சியப்ப செட்டியார் அவர்களது குமாரராகிய திரு. தீ. நா. முத்தையா செட்டியாரவர்களுடைய அறம் முதலிய நலங்களும் இந்நூலில் ஆங்காங்குப் புலப்படுத்தப் பெற்றிருக்கின்றன.

முடிவாக, இந்நூல் தமிழர்களுக்கு மிக்க ஊக்கத்தையும் கழிபேருவகையையும் பெரிதும் விளைவிக்குமென்று திண்ணமாய்க் கூறலாம்.

திரிசிரபுரம்,
1—5—25.

தி. மூ நாராயணசாமி பிள்ளை,
M. A., B. L., M. L. C.



இராமச்சந்திரபுரம் தர்ம பூஷணம் திவான் பஹதூர்
தீ. நா. முத்தையா செட்டியாரவர்கள்
**F.R.S.A. (London), M.L.C. (Pudukottah)**
திருப்பாதிரிப்புலியூர் தேவஸ்தான தர்மகர்த்தர்

உ

ஓம் குமாரகுருப்யோ நம:

# இராமசந்திரபுரம் திருவாளர்

# தி. நா. நாச்சியப்ப செட்டியார்

## F. R. S. A. [London] அவர்கள்

## வரலாறு.

---

## அத்தியாயம் 1.

---

### நாடு நகரம்.

---

அமுதகிரண மதிமரபின் வழிவந்த ஈண்டிய சிறப்புடைப் பாண்டிய மன்னர்கள் மாட்சிமிக ஆட்சி புரிந்ததாய்; 'பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து' என அவ்வைப்பிராட்டியாரருளியபடி முத்துக்களை மிக்குடையதாய்; வடதிசை தாழ்ந்து தென்திசையுயர்ந்த ஞான்று அத்திசையிரண்டனையுஞ் சமமாக்கப்புக்க 'என்றுமுள செந்தமிழியம்பி யிசைகொள்' அகத்தியனார்க்கு இடமாய சந்தனப்பொதியில் தன்னிடம் பொலிவதாய்; திரிகூடமலை, கொடுங்குற்றம், திருப்பரங்குன்றம் முதலிய குறிஞ்சித் திருப்பதிகளையும், காளையார் கோவில், திருவாடானை, திருப்புத்தூர் முதலிய முல்லைத் திருப்பதிகளையும், திருவாலவாய், திருப்பூவணம், திருவேடகம், திருவாப்பனூர் முதலிய மருதத் திருப்பதிகளையும், திருவிராமேச்சுரம், திருச்செந்தில் முதலிய

செய்தற்றிருப்பதிகளையுந் தன்னகந் தழீஇயதாய்; குமரி, பொருநை, வையை, வெள்ளாறு என்னுந் திவ்ய நதிகளாற் றிகழ்வதாய்; 'இன்ன காலத்துத் தோன்றியதென ஒருவருஞ்சொல்லொணாது பிறிதொருமொழியின் உதவிவேண்டாது இளமை குன்றாது இனிமை சான்று இலக்கணம் அமைந்து அறநூல், பொருணூல், இன்பநூல், அன்புநூல், அருணூல் என்னும் பன்னூலான் நிறைந்து தெய்விகமரீஇத் 'தனித்து நடத்தல்பற்றி'யெனவும், 'தனித்தழகரத்தை யுடைமைபற்றி'யெனவும், 'தென்மொழியென்பதன் மரூஉவாதல்பற்றியெனவும், 'நாற்கணத் தானமைந்தமைபற்றி'யெனவும், 'இனிமைபற்றி'யெனவும், பெயர்க்காரணம் பலபெறீஇக் களங்கின்றி விளங்குகின்ற தமிழ்மொழியை வளர்ப்பான் எச்சங்கையும் ஆய்ந்த முச்சங்கங்களிருந்ததாய்; அவிர்சடைக் கடவுளும், அசலமங்கையும், அறுமுகத்தெய்வமும், அறுபத்துநான்கு அருளாடல்கள் இயற்றியதாய்; அவனிமங்கை வதனமண்டலம்போல இலங்குவது பாண்டிநன்னாடு.

அவ் வதனமண்டலத்திற் றிலகம்போல் வயங்குவது புதுக்கோட்டை இராச்சியம். அஃதறத்திற் கோராலயம்; பொருட்கொரு பொக்கிஷம்; இன்பத்திற்கோ ரிருக்கை; கல்விக்கொருகளஞ்சியம்; நாகரிகப் பயிர் ஓங்கும் நன்னிலம்; ஒழுக்கக்கொடிபடரும் உத்யானவனம்; சிற்பஞ்சிறக்குஞ் சிங்காரவனம்; கானஞ் செழிக்குங் கல்யாணமண்டபம். அதன்கண் வியாபார சாலைகள் ஒருபால், கைத்தொழிற்சாலைகள் ஒருபுடை, உத்யோக சாலைகள் ஒருபுறம், நியாய

சபைகள் ஒருசார், வைத்திய சாலைகள் ஒருதலை, வித்தியாசாலைகள் ஒருசிறை, கழகச்சாலைகள் ஒரு பக்கம், காட்சிச்சாலைகள் ஒருபாங்கர் உண்டு. எங்கும் அன்னம் அருத அறச்சாலைகள், எங்குந் தாபந்தீர்க்குந் தண்ணீர்ப்பந்தர்கள், எங்கெங்கும் வான்ஞெடு சோலைகள், எங்கெங்கும் வற்ருத பொய்கைகள் ஆங்குள.

செண்டுவெளிகள், சாரிவெளிகள், தேர்நிலைகள் யானைக் கூடங்கள், குதிரைமந்துரைகள், அஸ்திர சாலைகள், சஸ்திரசாலைகள், சிலம்பக்கூடங்கள், படை வீடுகள் முதலியனவும்; ஆஸ்தான மண்டபம், அரசிருக்கை மண்டபம், விசித்திர மண்டபம், விநோத மண்டபம், பாடல் மண்டபம், பரீக்ஷை மண்டபம், சித்திர மண்டபம், சித்திரத் தெற்றிகள் முதலியனவும்; ரத்ன பீடிகைகளும், பொன் மாளிகைகளும், பளிங்கு மாடங்களும், மணிப்பந்தர்களும், மகர தோரணங்களும், மங்கள கோஷ்டிகளும் யாண்டும் உள்ள எழுத்தொலி அறியலாகாக் கடை வீதிகள், சுற்றமும் விருந்துஞ் சோரா தோம்பும் வேளாளர் வீதிகள், கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉங் குறை கொடாத வைசியர் வீதிகள், வேல்கொண் டெறியினும் விழியிமையாத அரசர் வீதிகள், வேள்வியின் மிக்க வேதியர் வீதிகள், ஆதி சைவர் வீதிகள், சைவர் வீதிகள், தபோதனரிருக்கைகள் முதலியனவும் உரிய விடங்களில் ஒழுங்கு பெற அமைந்து பேரழகு செய்தலினன்றே, இதனை,

'இதுக்கோட்டை யில்லென்றே யறிஞரெலாம் வியக்கின்ற புதுக்கோட்டை'

[வெழிலின்மிக்க

என்றது?

பண்டை மேம்பாடுடைத் தொண்டைமான் அரசு புரியும் இப்புதுக்கோட்டை ராஜ்யத்தின் தென்பாலுள்ளது இராமசந்திரபுரமென்பது. இது சோழ மன்னர்களின் அரசிருக்கையூர்களாகிய உறையூர், கருவூர், திருவாரூர், சேய்ஞலூர், காவிரிப்பூம் பட்டினம் என்னும் ஐந்தூர்களின் ஒன்றாய், காவிரி சங்கமமென்னும் மகாதீர்த்தத்தை முன்னுடையதாய், இயற்பகைநாயனார் பட்டினத்தடிகள் முதலிய பல பெரியோர் உதித்த தலமாய், சிலப்பதிகாரம் பட்டினப்பாலை முதலிய நூல்களின்படி வருணிக்கப் பெற்றதாய் விளங்குறாஉம் புகாரி (காவிரிப் பூம் பட்டினத்தி)னின்றும் போந்து பாண்டிய நாட்டிற் குடியேறின இரத்தின தன மகுட வைசியரென்னும் நாட்டுக்கோட்டைத் தனவைசியர் இருந்து வாழுந் தொண்ணூற்றாறு நகரங்களினொன்றாவது.



# அத்தியாயம் 2.

## பிறப்பு வளர்ப்பு.

இந் நகரத்திலொரு நூற்றாண்டிற்கு முன்னர்த் தனவைசியர் வகுப்புக்கள் பலவற்றுள் வயிரவன்கோயில் தெய்வநாங்கர் வகுப்பில் தீர்த்தப்பச் செட்டியாரென்பார் சிறப்பொடு வாழ்ந்தார். இவர் முன்னோர், முதலிற் செங்கரையினும் அதன்மேற் காடத்தாம்பட்டியினும் வாழ்ந்தார்கள். இவர்காலத்தில் இந்நகரத்தில் ஓலைக்குடில்களேயன்றி ஓட்டு வீடுகளிருந்ததாகத் தெரியவில்லை. முதன் முதலாக ஓட்டுவீடு கட்டினவர் இவரே. இவர் காலத்திற் பஞ்சு வர்த்தகமும் வியவசாயமுமே தனவைசியர்க்குப் பெரு முயற்சிகளாயிருந்தன. ஆகவே, இவரும் தமக்குரிய செ. மு. விலாசத்திற்குப் பஞ்சு வர்த்தகமும், பலசரக்கு வியாபாரமும், பண்ட மாற்றும், தமது ஊரினும், ஏழாயிரம்பண்ணை, தூத்துக்குடி, கொட்டாணிப்பட்டி, சென்னப்பட்டி முதலிய ஊர்களிலும் மிக விரிவாக நடத்திவந்தார். அங்ஙனம் நடத்தி வருகையில் இவருக்குத் தமது மூன்றாமனைவியாகிய சிட்டுவள்ளியம்மையார் பால் எட்டுக் குழந்தைகள் பிறந்தன. அவற்றுட் சில பெண்ணுமாம். பிறந்த ஆண் குழந்தைகளிலொன்று,

"தோன்றிற் புகழொடு தோன்றுக"

என்றபடி புகழிற் கேதுவாகிய குணங்களுடன் கலியுகாதி கசூ௲உ பிலவ-ஸூ ஆனி-மீ 21-உ (4-7-1841)

வெள்ளிக்கிழமையன்று காலை 7½ மணிக்குப் பிறந்தது. பிறந்தபோதே அதன் உறுப்புக்களினமைப்பையும் முகவசீகரத்தையும் கண்ட பெற்றோர்கள் அதன் மாட்டுப் பேரன்புவைத்து நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாகப் பாராட்டிச் சீராட்டிப் போற்றி வளர்த்து அதற்கு 'நாச்சியப்பன்' என நாமகரணஞ் செய்தார்கள். 'புதுமை' முதலிய சடங்குகளும் பொலிவோடு நடத்தி மகிழ்ந்தார்கள். குழந்தைக்கு நான்கு ஆண்டுகள் நிரம்பி ஐந்தாவதாண்டு நடைபெற்றது. விமரிசையாக வித்யாரம்பமுமாயிற்று. மேன்மை, அடக்கம், பொறை, கடைப்பிடி, ஆழ்ந்து செய்தல், முகக்குறிப்பாலகக்குறிப்பறிதல், ஏவாது செய்தல் முதலிய இலக்கணங்கள் வாய்ந்த சிறுவராதலின், தவறாது உரிய காலங்களிற் 'பாடசாலை சென்று பாடங்களை நன்கு படித்தார். இவர் மற்றை மாணவர்களோடு சொல்லாடுவது மல்லாடுவதுமில்லை. இவருக்குக் கணிதத்தில் அசாதாரண புத்தியுண்டு. சில ஆண்டுகளில் வியாபாரத்திற்கு வேண்டிய கணித முற்றும் செவ்விதிற் பயின்றார். இவர் வட்டிக் கணக்கு முதலியன முடிப்பது மிக்க வேகம். உபாத்தியாயருக்கே இச்செய்கை வியப்பை விளைத்தது. வீட்டிலிருக்கும் போதும் இவர் விளையாட்டிற் காலங்கழிப்பதில்லை. பெற்றோர்கள் மனதின்படி குறிப்பறிந்து நடப்பார்; பெற்றோர்களுக்கு இவர்மேற் பிரியம் நாளுக்கு நாள் மேலிட்டது. சிற்றுண்டிகளும் சிறந்த ஆடைகளும் இவர் விரும்பினாரில்லை. தெய்வ பக்தியும் பெரியார்ப் பேணலும் இவரிடம் தலை சிறந்தன. சின்னஞ் சிறுபருவத்தும் இத்துணைச் சிறந்த

குணங்களோடும் அதற்கேற்ற அறிவொடும் விளங்கின இவரை உரியபருவத்திற் பெற்றோர் பலசரக்கு வியாபாரத்தைக் கவனிக்கும்படி விட்டார்கள். இவர் ஓலை பிடித்து மிக்க விரைவுடன் கையேடு பேரேடு முதலியவற்றை ஒவ்வொரு நாளும் தாமே எழுதுவர். நெடுங்கால வியாபார வழக்கமுடைய பெரியோர் வியாபார மர்மங்களையும் வியாபார தந்திரங்களையும் நுட்பமாகிய விடயங்களையும் பற்றிப் பேசும் போது அவற்றை எளிதின் மனத்தின் வாங்குவர்; எஞ்ஞான்றும் மறவார்.



## அத்தியாயம் 3.

### வியாபாரம்.

சில ஆண்டுகளில் வியாபாரத்தின் ஊக்கம் மிக்கது. அக்காலத்தின் மிக்க பொருள் தேடுதற் கேற்ற வழி யாதென்று எண்ணினார். பல யுக்திகள் தோன்றின. பெண்கள், வியாபாரிகளிடம் பஞ்சு வாங்கி வந்து தங்கள் கைராட்டினங்களால் நூல் நூற்றுக் கடைக்காரர்களிடத்தும் பெரிய வியர்பாரிகளிடத்தும் விற்பது வழக்கம். இவர் அத்தகைய நூல்களைத் தமது பலசரக்குக் கடையிலுள்ள சரக்குகளைக்கொடுத்து ஏராளமாக வர்ங்கிச் சேமித்து வைத்து விலையேறுங்கால் பார்த்திருந்து விற்றார்; எஞ்சின நூல்களை திருப்புவனக் கடைக்குச் செலவிட்டார். இவ்வாறு இரண்டோராண்டு கழிந்தபின், தாமே பஞ்சு ஏராளமாக விளையும் ஏழாயிரம்பண்ணை, கொட்டாணிப்பட்டி, தூத்துக்குடி முதலிய இடங்களுக்குச் சென்று பஞ்சுகளை நேரே பரீக்ஷித்து வர்ங்கிவந்து அவைகளை நூற்பவர்களிடம் தந்து கூலிக்கு நூற்பித்து அவற்றைத் தாமே விற்று ஊதியத்தைப்பெருக்கினார். இன்னும் சிலகாலஞ் சென்றபின், தாம் நூற்பித்த நூல்களையெல்லாம் ஆடை நெய்வாரிடம் கொடுத்தும் சேர்ப்பித்தும் கூலிக்கு நெய்வித்துச் சேரும் ஆடைகளை விற்று ஊதியத்தைப் பதின்மடங்காக்கினார். இவரது இளம்பருவ நோக்கி இவர் குடும்பத்தார் பலர் வியாபாரத்திற்குவேண்டிய உதவிகளை அப்போ

தைக்கப்போது செய்தார்கள். பெரும்பாலும் வேண்டியபோதெல்லாம் அவர்கள் வெளியூர்க்குச் சென்றார்கள். ஆங்காங்கு ஆடைக்கு ஒப்பந்தஞ் செய்தார்கள். உரிய காலங்களில் மலியுமிடங்களில் பல சரக்குப் பிடித்தார்கள். அவர்களே உடனிருந்து வருஷாந்தக் கணக்கு முடித்தார்கள். அவர்களுடைய உதவி இவர் எண்ணியவாறு முடிதற்கு ஏதுவாயிருந்தது. இவரது ஊக்கத்தையும் உறுதியையும் உழைப்பையுங்கண்டு வியந்த இவரது பெரியோர் இவரை வெளிநாடு செல்லவிட்டால், அந்நாட்டு வியாபார முறைகளையும் நன்கறிந்து தக்கன செய்து தருவளம் பெருக்குவாரென்னும் துணிவு பற்றி நாகூரிலும் மலாக்காவிலுமுள்ள "சா. மு. அரு." கடைக்குக் கூட்டாளியாக ஏற்பாடு செய்துவிட்டார்கள். இவர் அவ்விடங்கள் சென்றிருந்தது, ஆங்கு நடந்த வியாபார முறையினும் பழகித் தேர்ந்து முதலாளியின் நன்கு மதிப்பையும் மிக்க பிரியத்தையும் பெற்று வேலை பார்த்து வருகையில் இவரது தந்தையாராகிய தீர்த்தப்பச் செட்டியாரவர்கள் சிவனடிப் பேறெய்தினர். இச் செய்தி இவருக்கு வந்தது. ஆயின், என்? அதனால் இவர் மனங்கலங்கி, ஊக்கமிழந்து, உருக்குலைந்து, சிலர்போலத் தொழில் முயற்சி குன்றினரோ? இல்லை.

இச் செய்தியை அறிந்தவுடன் இவர் மனம் சிறிது சலனமடைந்ததேனும், "நூற்றுக்கிருப்பினும் கூற்றுக்கிரையாதல்வேண்டும்," "கூற்றங் குதித்துய்ந்தாரீங்கில்லை" யெனக்கொண்டு, மனத்தைத்தேற்றித் தொழின் முயற்சியில் தலைப்பட்டு நின்றார். சர்வலோக நாயகனாகிய பரமன் படைப்பில் குறையின்று, பெற்

ரோர் முன் இறக்க நேர்தல் பற்றியும், மக்களாற்றிருத்தல் கருதியும் அவன் பெற்ரோர்க்கு மக்கள் பாலுள்ள நேயத்தினளவு மக்கட்குப் பெற்ரோர்பால் வைக்கக் காண்கிலம். இவ் வுண்மையறியாத உலகர் 'பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' எனக் குறை கூறுவர். இங்ஙனங் குறைகூறலடாது; அதுவே நியாயம். அது நிற்க, இவர் தந்தையார் காலஞ்சென்ற இவர் பின்னர் தாயார் உள்ளமிழந்தார், உடம்பிளைத்தார். உடம்பு முயிரும், கண்ணு மிமையும், நகமும் சதையும் போல், நன்மை வரினுந் தீமைவரினும் மன மொத்துப் பன்னெடுநாள் வாழ்ந்த கணவன் இழவு ஆற்ருெணுத் துயரத்தைத் தந்தது. கைம்மையொடு காலங்கழிப்ப தெப்படியென்று எண்ணினர்.

'தென்னவன்

'கோப்பெருந்தேவி குலேந்தன ணடுங்கிக்
கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவதிலென்
றடியிணை தொழுதவீழ்ந் தனளே மடமொழி'

சிலப்பதிகாரம்.

என்றவாறு ஏனைச் சுற்றத்தை இழந்தார்க்குப் பொன்னும் மணியும் ஆடையும் அணிகலமும் பிறவுங்காட்டி ஆற்றுதல் கூடும். கணவனையிழந்தார்க்கு ஆற்றுதல் கெனக் காட்டதக்கதொரு பொருளில்லை. என்னை? என்னை? அவர்கள் ஐம்புலன்களான் நுகரப்படுவன வற்றின் ஒன்றேனும் நுகர்தற்குருகாகார். அவ்வைப் பிராட்டியும் 'கலையளவே யாகுமாங் காரிகையார்' என்றதூஉ மிதுபற்றியேயாம். ஆதலின், நாளுக்கு நாள் அம்மையார்க்கு உண்டி குறைந்திருந்தது, உடல் மெலிந்தது, நோய் வந்தது, மனஞ் சோர்ந்தது. ஐந்து

திங்களில் அம்மையாரும் ஐயன் திருவடிக்கு ஆளாயி ஞர். இச்செய்தியும் இவருக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்போதும் இவர் செய்தொழிலின் ஊக்கம் குன்றிஞ ரில்லை. 'பட்டகாலிலேபடும் கெட்ட.குடியேகெடும்' என்னும் பழமொழிப்படி கெடுதி ஒன்றன்மேலொன் ருக வந்தது; கழிந்தவற்றிற் கிரங்கிப்பயனென்ன? 'கழிந்தன கழிந்தன', நின்றனவற்றைப்பற்றியே கவலை கொள்ளுதல்வேண்டும் எனக்கொண்டு இவர் எளிதின் மனந்தேறினர். அம்மையப்பர்களை ஒருசேர இழந் தும் இவர் தொழின்முயற்சி ஒரு சிறிதும் குன்ருது நின்றமை பெரிதும் பாராட்டற்பாலதேயாம். இத் தகைய மனவுறுதியும் கலங்காமையுமுடைய தீரர்கள் சிலரே. நாளேற நாளேற வியாபார முயற்சியின் முனைந்து நிற்கவே அவ்விழவுகளைப்பற்றிய நினைப்பு வரவரக் குறைந்தது. இவர் பழையபடி உள்ளக் கிளர்ச்சியோடு காரியங்களைக் கவனித்தார். அங்ஙனம் இருக்கையில் இவரது தமையனர் சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களிடமிருந்து இவருக்கு வந்ததொரு நிருபத்தில் இவரை ஊருக்கு வரும்படி எழுதியிருந் தது. அதன்படியே சிலநாட்களில் தமது ஊருக்கு வந்து சேர்ந்து தமது குடும்ப காரியங்களையும் இங்கு நடக்கும் வியாபாரங்களையுங் கவனித்தார்.

---

## அத்தியாயம் 4.

### திருமணம்.

இவருக்கு இப்போது இருபத்தைந்து பிராயம் நடக்கிறது. இன்னும் மணம் முடியவில்லை. இவர்கள் இனத்தில் பன்னிரண்டு பதின்மூன்று வயதிற்குள் மணமுடிவது வழக்கம். இவருக்கு இளமையில் மணம் நிகழ்வில்லை, இருபத்தைந்தாவது பிராயத்தில் இவரது தமையனாரும் மற்றுஞ்சில முதியோரும் இவர் மணத்திற்குவேண்டிய முயற்சி செய்தனர்; பெண் தேடினார்கள். பெண் தேடுவது எளிதன்று. மணமகனின் கருத்திற்கிசைந்தவளாய், கண்ணிற்கினியவளாய், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணமுமுடையவளாய் ஒரு பெண் வாய்ப்பது அருமையினும் அருமை. அங்ஙனம் வாய்ப்பினும் பெண்ணைப் பெற்றார் யாதானும் ஒரு குறை கருதி அப் பெண்ணைத்தர மறுப்பினும் மறுப்பர். இவர்மட்டில் அப்படியில்லை. இவர் சிந்தைக்கினிய செல்வி எளிதின் வாய்ந்தனள். இராயபுரம் நெய்வாசற்பட்டியார் வீட்டில் கருத்தாஞ் செட்டியார் குமாரி சௌபாக்கியவதி உமையம்மை என்னும் குணவதியை இவருக்குப் பேசிமுடித்தார்கள். அப்பெண் மணிக்கு வயது பத்தொன்பது. அக்ஷய வருஷத்தில் திருமணம் நிறைவேறியது. தம்பதிகள் இல்லறம் நடத்தத் தொடங்கினார்கள். காக்கையின் இரண்டு கண்களுக்கும் மணி ஒன்றே ஆதல்போல

இவ்விருவர் உடற்கும் உயிர் ஒன்றே என்னும்படி யிருந்தது. இரண்டு கண்களும் ஒருபொருளையே ஒப்ப நோக்குதல்போல இவ்விருவரும் ஒரு விஷயத்தில் ஓரபிப்பிராயத்தையே கொண்டனர். அன்பென்பது மனைவி மக்கள் முதலிய தொடர்புடையார் மாட்டுளதாகும் நேயமென்றும்; அஃதில்லறத்தார்க்கு இன்றியமையாத தொன்றென்றும்; அஃதில்வழி இன்புமின்றாமென்றும்; பெரியாருரைத்தார். இம் மனைவி மகிழ்நர்களுடைய அன்புக்கு எல்லையில்லை. மகிழ்நன் மகிழ்ந்துழி மனைவி மகிழ்ந்தனள்; மனைவி மகிழ்ந்துழி மகிழ்நன் மகிழ்ந்தனள். அவன் வருந்துழி அவள் வருந்தினள்; அவள் வருந்துழி அவன் வருந்தினன். அவன் உவந்துழி அவள் உவந்தனள்; அவள் உவந்துழி அவன் உவந்தனன். அவன் உலந்துழி அவள் உலந்தனள்; அவள் உலந்துழி அவன் உலந்தனன். இத்தகைய ஒற்றுமை யிருந்தமையின் தென்புலத்தாரையும், தெய்வத்தையும், விருந்தினரையும், ஒக்கலையும், இனிது புறந்தந்தார்கள். அன்னதானத்திலும் ஆவோம்பலினும் இவர்களுக்கு மிக்க ஆர்வம். இம் மங்கையர்க்கரசி, தன் மாமன், மாமியார், நாத்தூனார் முதலிய பெரியோர்களிடத்து மிக்க வணக்கமும் அன்புங்கொண்டு அவர்களுக்கு வேண்டியன செய்தனள். இப்பெண்மணியாற் குடும்பத்திற் கலகம் ஒன்றுமில்லை.

இங்ஙனம் நடந்துவருகையில், இந்த அம்மைக்கு மூன்று குழந்தைகள் பிறந்து இறந்தன. அதனால் மகப்பேறு குறித்துத் தங்களூராகிய இராமசந்திரபுரத்திலுள்ள கிராமதேவதை கொப்பிடாரியம்மனை

கோயிலுக்குத் தவறுது சென்று பராய்க்கடன் பல செய்தார்கள். அம்மை யார் என்ன என்ன மருந்து அருந்தச்சொல்லினும் அவற்றையெல்லாம் அருந்தினள். யார் யார் என்ன என்ன விரதஞ் சொல்லினும் அவற்றையெல்லாம் காத்தனள்.

இவ்வாறு சிலநாட்கள் செல்ல, கொப்பிடாரியம் மனையருளால் கி. பி. 1870-க்கு நேரான பிரமோதூத வாண்டில் ஒரு பெண் மகவு பிறந்தது. அம் மகவிற்குச் 'சிவகாமி' எனப் பெயரிட்டு அன்போடு வளர்த்தார்கள். ஆயினும், அவர்கள் மனக்குறை நீங்கிற்றில்லை.

'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற'

எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் அருளியபடி அறிவறிந்த மக்களை — அஃதாவது ஆண் மக்களைப்—பெறுதலே சிறந்த பேறெனக் கொண்டார்கள். 'என்று தமக்கு ஆண்மகப்பேறுண்டாமோ!' என்றேங்கினார்கள். அப்பெற்றிற்குரியதெனப் பெரியோர் கூறிய முயற்சிகள் எல்லாவற்றையுஞ் செய்தார்கள். இராமேச்சுரம் முதலிய திருப்பதிகளுக்குப் பல தடைகளையுங் கடந்து சென்று பலபலவிதமாக நேர்ந்துகொண்டார்கள்; திலதானம் முதலிய பல தானங்கள் ஏராளமாகச் செய்தார்கள்; சோமவார விரதம், சஷ்டிவிரத முதலிய பற்பல விரதங்களை மேற்கொண்டார்கள். பட்டினிவிட்டிருத்தற்கு ஒரு சிறிதும் அவர்கள் பின்வாங்கவில்லை. இன்னோன்ன முயற்சிகள் பல செய்தும் ஆண் மகப் பேறு எளிதின் எய்திலர். அஃதங்ஙனமாக; இவர் தமையனார்

சொக்கலிங்கஞ் செட்டியார் சிலநாட்கள் நோய்கொண் டிருந்து தேக வியோகமடைந்தனர். 1874-ஞு தொட்டு மஞ்சகுப்பம் ஜில்லாவிற் கூடலூரில் குடும்பப்பொதுவில் நடந்துவந்த 'தீ. அ.' விலாசக் கடையை நடத்துதற்குத் தக்க சாமர்த்தியம் வாய்ந் தவர் பிறரின்மையின், இவரே அங்குபோய் அதனை நடத்த நேர்ந்தது. அங்குக் கைலி (முகம்மதியர், சிங்களர், பர்மியர் முதலியோர் அணிந்துகொள்ளும் ஆடை) வர்த்தகத்தைச் சாதுரியமாக நடத்தினர். தமது தமையனர் செய்துவைத்த வியாபார முறை களிற் பல சீர்திருத்தங்களும் சில புதிய ஏற்பாடுகளுஞ் செய்தனர். இவற்ருல் அக் கடையில் ஊதியம் பல் கிற்று. அதன்மேலும் இவர் கண்டவர் கண்ணேயும் மனத்தையும் கவரவல்ல பற்பல மாரு வர்ணங்களேப் புதிதாக வரவழைத்து, நாணயமான நூல்களுக்கு அவற்றை ஏற்றி, எவ்வெவ் வர்ணங்களே எவ்வெவ் விடத்தில் எவ்வெவ்வகையி லமைத்து நெய்தாற் பகட் டாமெனத் தெரிந்து, அவ்வவ் வர்ணங்களே அவ்வவ் விடத்தில் அவ்வவ் வகையி லமைய நெய்வித்தார். கைலிகள் நூதனமாகத் தோன்றின. கண்களேப் பறித்தன. மனத்தைக் கவர்ந்தன. ஊரெல்லாம் ஒன் ருய் அக் கைலிகளே வாங்க ஆரம்பித்தன. வியா பாரம் கங்குகரை கொள்ளவில்லே. தமது தமையனர் பிள்ளேகளும் இன்னுஞ் சில நெருங்கின உறவினரும் மேற்பார்த்து வந்த புதுச்சேரி, நாகை, புத்தூர், கும்ப கோணம் முதலிய இடங்களில் செய்த அச்சடிப் புடவை வியாபாரமும் பலத்தற்கேற்ற வழிகளேத் தேடினர். பல பல நூதனமான பூ, இலே, காய்,

கொடி முதலிய அச்சுக்களை ஊற்றி அப்புடவைகளில் அவற்றை அடிப்பித்தார். இவர் அபார கற்பனு புத்திகொண்டு செய்த சில சில நூதனமான வியா பாரச்செய்தி எங்கும் பரவியதனுல் இவருக்கு எங் கெங்கும் நன்கு மதிப்பும், செல்வாக்கும் உண்டாயின.

"உண்ணுமுலை உமையாளொடு முடனுகிய வொருவன்
பெண்ணுகிய பெருமான்மலை திருமா மணிதிகழ
மண்ணார்ந்தன வருவித்திரள் மழலைம் முழவதிரும்
அண்ணுமலை தொழுவார்வினை வழுவா வண்ணமறுமே,,

சம்பந்தர் தேவாரம்

"தவக்கற வறிந்து பிறக்கு மாறனுந்
துயர்ந்திடா தடைந்து காண்மன்றும்
உவப்புட னிலைத்து மரிக்குமோர் பதிய
மொக்குமோ நினைக்கு நின்னகரைப்
பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண
சைலனே சைலநா யகனே"

என்றவாறு ஓரிடத்திலிருந்து நினைத்துக் கைதொழு வார்.வினை துமித்து அங்ஙனமே முத்தியளிக்குந் திருப் பதியாகிய திருவண்ணுமலைக்கு 1875-ம் ஆண்டிற்கு நேரான யுவ-ஞு முதல் 45-ஆண்டுகள் கார்த்திகை தீபத்துக்குச் சென்ருர். இது, அக்காலத்தில் எளி தின் முடிவதொரு காரியமாயில்லை. தம் ஊரினின்று அதுவோ நெடுந்தூரம். யாத்திரை சவுகரியங்களோ மிகக் குறைவு. இருப்புப்பாதை வண்டியில்லை. கட்டைவண்டியிலும் கால் நடையானுமே அத்தனை தூரமுஞ் செல்லவேண்டும். வழிநடை வருத்தமின்றி, ஆங்காங்கு ஆற்றுப்பெருக்கு முதலிய பலதடைகளு

முண்டு. வருத்தத்தையும் பாராது தடைகளுக்கும் பின்வாங்காது ஆண்டுதோறும் பலநாட்கள் வழிநடந்து சென்று அத்திருப்பதியைக் காலத்திலடைந்து அங்குத் தங்கும்வரை உடற்றூய்மையொடும் அகத்தூய்மையொடும் நாடோறும் கிரிவலஞ்செய்தார். என்ன என்ன செய்தும் இவர் மனக்குறை இன்னும் நிறையவில்லை.

ஆண்மகப் பேறில்லை யென்பதே இவர் மனத்திற் பெருங்குறை. பிறந்தநாட் டொடங்கி முடியுநாள் மட்டும் ஓரவன் குறைவின்றி இப்பொல்லா நிலத்தின்கண் வாழ்ந்தானில்லை யென்பது, ஒருகாலன்று; இருகாலும் முக்காலும் உண்மை. சில நாட்களேனும் மானிடர் குறையின்றி வாழ்தல் கூடுமோவெனின், கூடும்; அஃதெப்போதெனின்,

"தனதானியமிட மாடா டாதி தயங்கு பொருட்சார்புந்
தருதாய் தந்தையி னாரா தியராஞ் சாரு முயிர்ச்சார்பு
மினமாஞ் சார்புக ளிவைமே லாசை யிகந்தா மையினேந்து
மெழில் பெற வுட்கொண் டசையா தென்று மிருந்து சமாதியிலே
மனமார் வாதனை யறவே யென்று மதித்த சுழுத்தியனாய்
மன்னிரு ளற்றனை யென்றனை கிற்பேன் மாதவ மாகடலே
மினலார் மேகந்தங்கிப் பொழில்வாய்வெண் டாளத் துளிகால்
வேத கிரிப் பவரோக வைத்திய வே ணிமுடிக் கனியே"
வேதகிரீசுவரர் பதிகம்.

என்றபடி இருவகைப் புறப்பற்றுக்களையும் அகப்பற்றையும் நீக்கி ஒன்றும் வேண்டா உந்நதநிலை ஒருவற்கு வாய்க்குமாயின் அன்றுதொடங்கி, அப்போது தொடங்கி, அந்நிலை குலையாதிருக்குமட்டுமாம். ஓர் ஆங்கிலப்புலவர், 'மனிதற்கு எத்துணை இன்பமுண்டு'

என்னும் வினவை எழுப்பி, அதற்கு விடையாகப் பின்வருமாறு கூறுகின்றார். "பின்னத்திற்கு அங்கில கணிதத்தின் மேலெண் ஒன்று. கீழெண் ஒன்று ஆக இரண்டுள. $\frac{2}{5}$ என்றால் ஐந்து இரண்டு என்பது பொருள். $\frac{5}{16}$ என்றால் பதினாறினைந்து என்பது பொருள். இன்பம் என்பது ஒரு பின்னம். அதன் மேலெண், நீ உடைய பொருள்; அதன் கீழெண், நீ வேண்டும் பொருள்" என்றார். அவர் அங்ஙனம் கூறியதன் கருத்தென்? ஒரு பின்னத்தில் மேலெண் குறையக்குறைய அதன் மதிப்புக் குறைதலும், அது மிகமிக அதன் மதிப்பு மிகுதலுமுண்டு. அஃதங்ஙனமாக, கீழெண் மிகமிக அதன் மதிப்புக் குறைதலும் அது குறையக்குறைய அதன் மதிப்பு மிகுதலுமுண்டு. எனவே, மேலெண் யாதாயினும் கீழெண் சுன்னமாயின் அதன் மதிப்புக் கெல்லையில்லை; அஃதாவது அது நிரவதிகமா மென்றறியப்படும். அஃதொப்ப நீ உடைய பொருள்கள் எத்துணைய வாயினும் நீ வேண்டும் பொருளொன்றில்லையாயின், முடிவிலின்பம் பெறுவாயென்பது அவர் கருத்தாமென்க. இதனையே குமரகுருபர சுவாமிகளும்,

> "செல்வ மென்பது சிந்தையின் நிறைவே
> அல்கா நல்குர வவாவெனப் படுமே
> உவாக்கடல் சிறுக வுலகெலாம் விழுங்கு
> மவாக்கடல் கடத்தற் கரும்புணை யின்றே"

எனப் பணித்தார்.

ஆசையின்றி வாழ்வது மும்மலம் நசிக்கும் நிலையிற் கைகூடுவது. இவர் இல்நெறி நின்று அதற்குரியன செய்பவராகலின், ஆண்மகவின்மை யெனும்

குறையானது புதுவதன்று. இக்குறை மனத்திற் குடி கொண்டமையின், தமது ஊரிற்குச் செல்லவும் இவருக்கு மனமெழவில்லை. இவர் மனக்குறை யறிந்த திருவகீந்திரபுரத்து வைணவப் பெரியாரொருவர் இவரிடம் வந்து 'திருவகீந்திரபுர' மென்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ தேவநாதப் பெருமாளுக்குச் சில கைங்கரியங்கள் செய்து வருவீராயின், உமக்கு ஓராண்டில் ஆண் மகவு பிறக்கும்' என வுறுதியாகச் சொன்னார். அவர் சொன்னபடியே அத் திருப்பதிக்கு அடிக்கடிசென்று பெருமாளைத் தரிசித்துச் சில கைங்கரியங்கள் செய்து வந்தனர். வருகையில் மூன்றுவது கணக்கு முடிந்தது. அது முடிந்தமையானும், ஊரிலிருந்து தம்மை வரும்படி மேன்மேல் நிருபங்கள் வந்தமையானும், அவ்வாண்டு வைணவப் பெரியார் சொன்னபடி ஆண்மகவு பிறக்குமென்னும் துணிவு தம் மனத்தூன்றி நின்றமையானும், கணக்கை முடித்து லக்ஷத்து நாற்பதினுயிரம் ரூபாய் இலாபத்துடன் இராமசந்திரபுரம் வந்து சேர்ந்தார்.





## அத்தியாயம் 5.

### ஆண்மகப்பேறு.

அங்ஙனம் வந்து சேர்ந்து சில மாதங்களான வுடன் மனைவியார் கருவடைந்தார். கரு வடைந்தும் அவ் வம்மையாருக்கு வயாவும், வருத்த மும் மற்றைக் கர்ப்பிணிகளைப்போல இல்லை. கரு வடைந்திருந்த காலத்தில் அவ்வம்மையாருக்கு நல் லெண்ணமும் தெய்வசிந்தையும், தருமநோக்கமுமே மேலிட்டிருந்தன. அதற்குமுன் என்றும் இல்லாத வொரு மனப்பூரிப்பும் அப்போது அவருக்கு இருந் தது. கருமுற்றியபின் சுபாநு-ஹூ ஆடி-மீ 13-உ (27-7-1883) வெள்ளிக்கிழமை பரணி நட்சத்திரத் தில் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தனர்.

'வயாவும் வருத்தமு மீன்றக்கா ணேவுங்
கவாஅன் மகற்கண்டு தாய் மறந்தாஅங்கு'

* * * *

களைத்துக் கண்கள் காணுவாக
செவிகே ளாது செய்ய மாழ்குழிக்
குழவியி னழுமொலி குவாவெனச் சிறிது
செவிபுக் குறைப்பச் சேண்விளங் கொருமுத
லொருத்தி யிடிப்பவு மொருத்தி யடிப்பவு
மெளிய ளாகிவந் தெடுத்தடுக் குறிக்கண்
வெண்ணெயுண் ஞான்றுசெய் வேணுகா னத்தாற்
பட்டமரந் தளிர்த் தாங்குப் பதனுளம்
பூத்துடல் பூரிப்பெய்தப் புரிந்துதான்
முன்புறு துயரெலா முதலிலாக் கனவென
வெண்ணி யின்பப் புணரியி லாழ்ந்தனள்."

என்றவாறு ஈன்ற அம்மையார் குழவியின் அழுகை யொலி கேட்டதும் தாம் உற்ற பிள்ளைப் பேற்றுத் துன்பம் கனவெனக்கொண்டு உளம்பூரித்து உடல்புள கித்து இன்பக் கடலினாழ்ந்தனர் எண்ணெய் விழா முதலியன மிக்க சிறப்புடன் நடந்தேறின. வைண வப் பெரியார் வாக்கின்படி வைதீசுவரன் கோவிலில் எழுந்தருளியிருக்கும் இளைய பெருமாளின் திருப் பெயராகிய 'முத்தையா' எனக் குழந்தைக்கு நாம கரணஞ் செய்தார்கள்.

'பின்னம் மகவைப் பேணிக் கண்ணெனப்
போற்றி வளர்த்தனள் பொருஅண் மற் றதன்மே
லோரீ யிருப்ப வொரொவழி நலிகொள
வெண்மிகுந் தாங்கே யேற்றுக் கைக்கு
மருந்து மருந்தி வருந்திப் பன்னு
ணல்லுண வெறுத்து நாடினள் குணனே.'

என்றவாறு மிக்க கருத்தொடு அம்மையார் அக்குழந் தையை வளர்த்து வந்தனர். செட்டியாரவர்கள் மூத்தகுமாரி சௌபாக்கியவதி சிவகாமியம்மையாரு க்கு இப்போது பதினான்காவதாண்டு நிரம்பிற்று. அதனால் அவர் திருமணத்திற்கு இதுவே தக்க பருவ மென அறிந்து தாம் இதற்குமுன் திருவண்ணாமலை யிற் பேசி முடித்தபடி காட்டத்தாம்பட்டி மெய்யணி யார் வீட்டுத் திருவாளர் சுப்பிரமணியச் செட்டியா ரென்பாருக்குக் கன்னிகாதான விதிப்படி திருமணம் செய்து கொடுத்தார். சௌ. சிவகாமி அம்மையார் பூர்வபுண்யவசத்தாலோ அல்லது குணப்பேற்றின் நலத்தாலோ தாம் புகுந்த குடும்பம் நாளுக்குநாள் செல்வம், மேன்மை, அதிகாரம், மக்கட்பேறு

முதலிய எல்லாவற்றினும் வளர்பிறை போல ஓங்கிற்று. இன்றும் அக்குடும்பம் ஒரு குறைவுமின்றி விளங்கி நிற்கிறது. அது நிற்க, 'முத்தையா' என்னும் குழந்தைக்கு ஐந்தாவதாண்டு நடைபெறுகின்றது. அதனாற் செட்டியாரவர்கள் குழந்தைக்கு வித்யாரம்பஞ் செய்வித்தார்கள். குழந்தையும் பள்ளிக்குச்சென்று படித்து வருகிறது. அக்காலை மற்றைப் பிள்ளைகளைப் போல விளையாட்டிலாவது வேடிக்கையிலாவது வீண் பேச்சிலாவது இந்தப் பிள்ளைக்கு மனஞ்செல்லவில்லை. உரிய காலத்திற் பள்ளிக்குச் செல்வதும், அங்கு உபாத்தியாயர் கற்பித்த பாடங்களைப் படிப்பதும், குறித்த காலத்தில் வீடு செல்வதும், உரிய வேளையில் உண்டி கொள்வதும், உரிய நேரத்தில் உறங்குவதுமே அது செய்தொழில்களாயின.

'வீணுரை கரும்புமீசன் மெய்யுரை வேம்பு மாக்கும்
தாணுவை யிறைஞ்ச வொட்டா தையலை யிறைஞ்சப்பண்ணும்
நாணற விரத்தல் செய்யு நல்லவர்க் கீதல் செய்யா
தாணவ மலத்தின் செய்தி யிவ்வண மறிந்துகொள்ளே'

என்றவாறு நால்வகையோனி, எழுவகைத்தோற்றம், எண்பத்துநான்கு நூறாயிரயோனி பேதங்களின் மாறி மாறிப் பிறந்துழலும் உயிரனைத்தையும் பற்றி நின்று அவற்றிற்குக் கேடுவிளைக்கும் ஆணவமலத்தின் செய்கைகளுளொன்று வெற்றுரை. இச்சிறுவர் 'விளையும்பயிர் முளையிற்றெரியும்' என்பதற்கொப்ப, இளமைப் பருவத்தும் இவ் வீணுரையை வெறுத்தார். தம்மையொத்த இளஞ்சிறாருடனேயும் அவர் வெற்றுரையாடுவதில்லை என்றால் தந்தை தாயார் உற்றார் நட்டார் முதலியவருடனும் அது செய்வரோ? செய்தா

ரில்லை. இவரிட மிச்செய்கை கண்டு சில சகபாடிகள் இவரைப் பரிகசிப்பது தெரியினும், இவர் கண்டுங் காணுது கேட்டுங் கேளாதிருப்பர். இவரிடம் அமைந்த நற்குணங்களுள் சிறந்து நிற்பது சாந்த மென்னும் உயர்குணமேயாம். இன்னும் ஒருகால் இவரைக் கண்டோரும் இவர் சொல்லாடக் கேட்ட வரும் இவ்வுண்மையை மறுர். செட்டியாரவர்கள் அப்போதைக்கப்போது உபாத்தியாயரை வர வழைத்துத் தனியேவைத்துப் பிள்ளையின் கல்வி, குணம், நடை முதலியவற்றைப் பற்றிக் கேட்ப துண்டு. உபாத்தியாயர் அவற்றைக் குறித்துப் புகழ்ந்து சொல்லும்போது செட்டியாரவர்களுக்கு ஒருபுயம் இருபுயமாம்.



## அத்தியாயம் 6

### வீடுகட்டல்.

இஃதிவ்வாறிருக்க முன்பு கட்டிய ஓட்டுவீடு தாயாதிகளெல்லாம் குடியிருக்கப்போதவில்லை. செட்டியாரவர்களுக்குத் தாயாதிகள் யாவரும் ஒற்றுமையோடு நெருங்கியிருந்து வாழவேண்டுமென்கிற எண்ணம் தலைசிறந்து நின்றதேனும், அவர்கள் சாமர்த்தியத்தால் இதுவரையும் குடும்பத்தில் ஒருவித மனக் கோணலுங் குழப்பமுமின்றி யாவரும் ஒத்துநின்றாரேனும், குடும்பம் நாளுக்குநாள் விருத்தியடைந்தமையின் செட்டியாரவர்கள் வேறு வீடொன்று கட்டத் துணிந்தார். 1884-ஆண்டில் ஒரு பெரிய வீட்டைத் தமது ஊரின் நடுவில் மிக்க பொருட் செலவுசெய்து கட்டிமுடித்தார். வீடுகட்டுகையில் ஒருநாள் செட்டியாரவர்கள் அணிந்திருந்த விலையுயர்ந்த மோதிரமொன்று காணமற்போயிற்று. செட்டியாரவர்கள் கட்டிட வேலையை மேற்பார்த்து வருகையில் அது கழன்று தொழுவத்தண்டை விழுந்தது. குற்றேவல் செய்யும் ஒரு புலைப் பெண்ணைக்கொண்டு விசாரிக்க அஃதெப்படியோ வீட்டிற்குள் வந்து கிடந்தது. பின்னும் ஒருகால் சில சாமான்கள் காணமற்போய்ப் பின் கிடைத்தன. களவாடினன் இன்னனென்று தெரிந்தும் செட்டியாரவர்கள் அவனை ஒன்றுஞ் செய்தாரில்லை. மோதிரம் காணமற் போகப்

பட்டது முதல் தாம் ஆபரணங்கள் அணிவதில்லை யென்று செட்டியாரவர்கள் பிரதிக்ஞை செய்துகொண்டார்கள். அவர்களிடம் ஆடம்பரமென்பது ஒரு சிறிதுமில்லை. அவர்கள் உடை முதலியவை சர்வ சாதாரணமானவை. உயர்ந்த உத்திரீயங்கள் அவர்களுக்குத் தெரியா; சட்டையென்பதை முற்றிலும் அவர்கள் செய்தது அசட்டையேயாம்.



# அத்தியாயம் 7.

---

## வாயுவாதை.

---

கூடலூரிற் செட்டியாரவர்கள் ஏற்படுத்திய புடவை வியாபாரம் நடந்து வந்ததேனும் அதை இன்னும் விரிவுற நன்கு நடத்த வேண்டுமென்கிற எண்ணம் அவர்களுக்கு இப்போது மேலிட்டது. தாமே அங்குச் சென்றிருந்து அதை நன்கு நடத்தவேண்டி மனைவியாரையும் உபாத்தியாயரையும் அழைத்துத் தனித்தனி அவர்களிடம் தமது பிள்ளை முத்தையாவைச் செவ்வையாய்க் கவனிக்கும்படி பலமுறை வற்புறுத்திச் சொல்லிவிட்டு நன்னாளில் ஊரைவிட்டுப் புறப்பட்டுச் சென்றனர். கூடலூரிலிருந்து வியாபாரஞ்செய்கையில், செட்டியாரவர்களுக்கு வாயுவினால் ஒருவித வலியுண்டாயிற்று. ஆயினும் அப்படி வலியுண்டான செய்தி பிறருக்குத் தெரியாதபடி அதை பொறுத்துக்கொண்டு பலவேலைகளையும் வழக்கப்படி மேற்பார்த்தும் நடத்தியும் வந்தார். வியாதிக்கு மருந்தொன்றும் உட்கொள்ளவில்லை. கண்ட வைத்தியர்களிடம் மருந்தை யுண்ணலாகாது, ரசகந்தக பாஷாணங்களைக் கையாளும் வைத்தியர் பலர்; மூலிகை முறையறிவார் சிலர்; நோய் நோய்முதல் அது தணிக்கும் வாய் இவற்றை நாடாத வைத்தியர் பலர்; அந்நோய் முதலியவற்றை நாடும் வைத்தியர் சிலர்; இன்னமருந்திற்கு இன்ன பத்தியம்,

இன்னது அனுபானமென்றறியாத வைத்தியர் பலர், அவற்றை யறியும் வைத்தியர் சிலர், உளரென்பதும்; ஒரு நோய்க்கு மருந்து கொள்ளின் அது மற்றொரு நோயை ஆக்குதலுண்டென்பதும் செட்டியாரவர்கள் கொள்கை. ஆதலின், அவர்கள் உண்டிமுறையாலும், காய் கறி வகையாலும், தமது வாயுவலி அடங்குமாறு தந்திரமாகப் பரிகாரந் தேடினார்கள். அவர்கள் தின்டிட்டுச் சாய்ந்து உண்டது அருகபடி ஒன்றுஞ் செய்யாது சோம்பி இருப்பதில்லை. வீட்டு வேலைகள் பலவற்றைத் தாமே செய்வார்கள்; பலவிடங்களுக்குச் செல்கையில் வண்டி வேண்டாது கால்நடையாகவே செல்வார்கள். இவ்வாறு உழைப்பாளியாயிருந்தமையாலும் 'அற்றபின் உண்ணுதல்' 'அளவறிந் துண்ணுதல்' முதலியவற்றை அனுசரித்து வந்தமையாலும் அவர்களை நோய் மிகுதியாகப் பீடிக்கவில்லை.



## அத்தியாயம் 8.

---

### ஊருக்கு வருதல்.

---

இம்முறை செட்டியாரவர்கள் வியாபார விர்த்திக்கு வேண்டிய பல உபாயங்களையும் மிக்க ஊக்கத்தோடு அறிந்து, அவற்றால் தக்க ஊதியம் பெற்றுப் பெரும் புகழுடன் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். ஊருக்கு வந்தபின் தமது சற்புத்திரர் முத்தையா செட்டியாரவர்களுக்குப் பன்னிரண்டாவதாண்டாரம்பத்தில் நச்சாந்துப்பட்டியில் கம்மஞ்செட்டியார் வீட்டில் பெரியகருப்பன் செட்டியாரவர்கள் அருமைப் புதல்வியார் சௌபாக்கியவதி உண்ணாமுலை அம்மையாரை ஜய (1894) ஹ்த்தில் திருமணஞ் செய்தார்கள். அதன்மேல் தாம் தமது ஊரில் இருந்துகொண்டு குடும்ப காரியங்களையும் விவசாயத்தையும் நேரிற் கவனித்தும், பற்பல தேயங்களிலுள்ள தமது கடைகளிலிருந்து வந்த நிருபங்களுக்கு அப்போதைக்கப்போது விடை விடுத்தும், பண முட்டுப்பாடு நேருங்கால் தகுந்த ஏற்பாடுகள் செய்தும், அவ்வவ்வூர்களில் அவ்வக்காலங்களில் விலைவாசிகளை நிருபமெழுதித் தெரிந்துகொண்டு ஏராளமாய் விலைபடக்கூடிய சரக்குகளைச் சரசமான விலைக்கு அவ்வவ்வூர்களிலிருந்து தருவித்தும், பிற்போது விலை ஏறக்கூடிய சரக்குகளைக் கட்டிவைத்தும், தாம் நேரிற் போயிருந்து ஒழுங்குபடுத்தக்கூடிய விஷயங்களை அங்ஙனம் போயிருந்து ஒழுங்குபடுத்தியும், இன்னோ

ரன்ன முக்கியமான காரியங்களைச் செம்மைபெறச் செய்தும் வந்தபோது, தமது புத்திரர் முத்தையா செட்டியாரவர்களும் எழுதுமுறை, கணக்குமுறை, தொழின்முறை, தொழினுட்பம் முதலிய எல்லா வற்றினும் வல்லவராம்படியும், தொழிலின்கண் ஊக்க மும் தேர்ச்சியும் உண்டாம்படியும், நாடோறும் உடன்வைத்துச் சில ஆண்டுகள் பயிற்றிய பின்னர் கடை விஷயங்களையும் ஏனைக் காரியங்களையும் நேரிற் கண்டு பழகுமாறு தமது உள்நாட்டுக் கடைகளுக்குப் போய்வரச் செய்தார்.



# அத்தியாயம் 9.

## வியாபார விருத்தி.

சில ஆண்டுகள் கழிந்தபின்னர் இக்குடும்பத்தார் 'தி. நா' 'தி. சொ.' எனத் தனித் தனி விலாசத்தோடு வியாபாரஞ்செய்து வந்தார்கள். விகாரி-ஹூ மார்கழி-மீ 22-உ (8—1—1900) முதல் இரண்டு விலாசங்களையும் 'தி. சொ.' என ஒன்றாக்கி 'எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்' என்னும் பழமொழிப்படி ஒற்றுமையுடயராய் இன்னும் வர்த்தகஞ்செய்து வருகின்றார்கள்.

இக்காலத்தில் இக்குடும்பத்தார்க்கு உள்நாட்டிலுள்ள பல ஊர்களிலும், அன்னிய தேசங்களிலுள்ள பர்மா, மலாய், பாங்காக், சீயம், சுமத்திரா முதலிய பல இடங்களிலும், மிகுதியாகக் கம்பாயமென்னும் லுங்கி, காங்கு, அச்சடிப்புடவை, பட்டுக் கைலி, லாங் கிளாத் (Long cloth), நூல் முதலிய வியாபாரங்களே நடைபெற்று வந்தன. இவ்வியாபாரங்கள் பெரும்பாலும் முகம்மதியர்களோடு செய்யப்படுவன. அம்முகம்மதியர்கள் யாவரும் செட்டியாரவர்களிடத்தில் அதிக அன்பும், நன்கு மதிப்பும் உடையவராயிருந்தார்கள். நமது செட்டியாரவர்களும் அவர்கள் பால் நேசமும், நம்பிக்கையும், மதிப்புமுடையராயிருந்தார்கள். அவர்கள் எவ்வளவு சரக்கு வேண்டியதென்று தெரிவித்தாலும் கையிருப்பிலுள்ள சரக்குகளொழிய

பிறவற்றைச் சேகரித்து உடனே அவ்வளவும் அனுப்பு வார்கள். மோசமென்பது ஓரிடத்திலேனும் இருந்த தாகத் தெரியவில்லை. இவ்வாறு நீண்டகாலம் நடந்த தற்கு முக்கிய காரணம் நமது செட்டியாரவர்களின் வர்த்தக வன்மையும், வாய்மையும், நல்லெண்ணமுமே யாம். அதுபோது வர்த்தகம் அவ்வாறு நடப்பதை கண்ட பலர் ஷெ வர்த்தகத்தைச் செய்ய முற்பட்டு வந்தனர். அதுகண்டு இவர்கள் பணமுடையின்றி என்றும் தொழின்முறை நடைபெற்று வருவதை யுத் தேசித்துப் புடவை வர்த்தகத்தோடு வட்டித் தொழி லையும் கைக்கொண்டு நடத்தினர்.

வட்டித் தொழிலாவது: கடலோடி அன்னிய தேசங்களுக்கும் தீவுகளுக்குஞ்சென்று, தமது சுகத் தையும் ஐம்புல நுகர்ச்சியையும் நாடாது, தாமே மிக்க ஊதியத்தைத் தேடாது, விரிந்த வியாபாரஞ் செய்து மிக்க இலாபம் பெறுகின்ற செல்வர்களுக்குப் பெரும்பொருளைக் கடன்கொடுத்து, அவர்கள் நூற் றுக் கிவ்வளவென் றறுதி யிட்டுக்கொண்டு தரும் சொற்ப ஊதியத்தை வட்டியெனப்பெற்று, அங்ஙனம் பெற்ற வட்டியினின்றும் ஒருபாகத்தைப் பல்வேறு அறங்களுக்கும், மற்றொரு பாகத்தை வீட்டுச் செல வுக்கும் ஆக்கி, எஞ்சிய தொகையை முதலோடு சேர்த்தலாகிய தொருதொழில்.

இத்தொழிலிற் பல காரணங்களான் முதலிழத் தலுமுண்டு; தேகாரோக்கியத்தை இழத்தலுமுண்டு; உயிரை இழத்தலுமுண்டு. மனைவி மக்கள் உற்றார் பெற்றார் நட்டார் நாட்டார் முதலியவர்களோடு கலந்து மகிழ்தலை இழத்தலுமுண்டு.

'கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப்பொருள் செய்திடல்' என்றபடி
பெரும்பொருளை அன்னிய நாட்டில் இரைத்துச் சிறிது சிறிதாக மீட்டும் பெறவேண்டியிருக்கிறது. இங்ஙனம் வட்டிக்குத் தருதலால் பிறநாட்டார் பெரும் பயனடைகிறார்களேயன்றித் தனவைசியர்கள் சிறிய இலாபத்தையே பெறுகின்றனர். இவர்கள் பணத்தால் செல்வர்களாயினும் இனையரென் றளவிட்டுச் சொல்ல முடியாது. இவர்கள் வட்டித்தொழில் செய்யவில்லை யென்றால், 'முதலிலார்க் கூதியமில்லை' என்றபடி ஏனையர் முதலின்றி ஊதியம் பெறாது வறுமையின் நீங்க வழிகாணாது வருந்துவர்.

இக் குடும்பத்தார் செல்வம்பெற்றது முழுவதும் புடவை வியாபாரத்தாலேயாம். செட்டியாரவர்கள் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளாக வியாபாரத்தினிடையறாது காட்டிய பேரூக்கத்தையும், பல ஊர்களிலிருந்து வியாபார விஷயமாக ஓயாது வரும் நிருபங்களுக்கு விடைகளை நாலாறு பெயர்களை ஒருங்கு வைத்துக்கொண்டு அஷ்டாவதானியைப்போல ஏககாலத்தில் முறைப்பற்றிச் சொல்லுஞ்சாமர்த்தியத்தையும், ஒரு கூட்டாளியையேனும் முகஞ்சுளியாமலும் கடிந்துபேசாமலும் இருந்தே கூட்டாளிகள் யாவரும் தமமைக்காணினும் தம் பெயர் சொல்லக் கேட்பினும் அச்சங்கொள்ளுமாறு நடந்துகொள்ளும் தன்மையையும், தவறு செய்பவர்களைக் கண்டியாது கண்டிக்கும் வன்மையையும், நேரிற்கண்டவர் ஆச்சரியங் கொள்ளாதிரார். இவர்களிடங் கூட்டாளியாயிருந்த பலரும் பெருஞ்செல்வ முடையவர்களாகவே இருக்கின்றனர்.

# அத்தியாயம் 10.

## குண முதலியன.

வியாபார சாமர்த்தியஞ் செட்டிப்பிள்ளைகளிற் பலருக்குண்டு. இளம்பிராயத்திலிருந்தே வியா பாரத்திற்கெனப் பழக்கி வளர்க்கப்படுதலின், அவர்களுட் பலர் வியாபார நிபுணராதல் புதுமை யன்று. ஆகலின் செட்டியாரவர்களிடம் அத்தகைய வியாபார நைபுண்ய மிகுந்தது வியக்கத்தக்கதொன் றன்று. பதினாயிரத்தொருவரிடமுங் காணப்படாத பரமசக்தி யொன்று செட்டியார்பாலிருந்ததே பெரு வியப்பிற்கிடமாம். அஃதென்? பிறர் தம்மைக் கண்டு காரணமின்றியும் அஞ்சும்படி நடந்துகொள்ளுதல்.

பிறர் அஞ்சும்படி நடத்தல்.

இது சாதாரண சக்தியன்று. இச் சக்தியுடையவரெல்லாம் பெரிதும் பாராட்டற்பாலர். இச்சக்தி யுடையாரிடமெல்லாம் சில செய்கைகள் காணப்படுகின்றன. அவை பிறரோடு பரிகாசமாகவே னும் விளையாட்டாகவேனும் சொல்லாடாமை; தாம் நல் லொழுக்கத்தினின்றும் ஒரு சிறிதுந்தவறாமை; வெளிக் குச் சிறிது கடுகடுப்பாகத் தோன்றினும் உள்ளத்தி னிரம்பத் தயையுடைமை முதலியனவாம். ஒரு பெருங் கூட்டத்திற்கோ அல்லது ஒரு கைத்தொழிற்சாலைக் கோ அல்லது ஒரு வியாபாரசாலைக்கோ தலைமை வகித்து அதிகாரஞ் செலுத்தும் பெரியார்க்கு இச் சக்தி இன்றியமையாததொன்று. செட்டியாரவர்கள் பால் இச்சக்தியிருந்தமையாற்றான் மேனிலையுஞ் செல் வாக்குமுடையாராய் விளங்குத லெளிதாயிற்று.

கூட்டாளிகள் தமது சொற்படி நடவாமையின் பெருநஷ்டம் நேர்ந்தபோதும் அவர்களைக் கடுகடுத்

பொறை. துப் பேசாமலும் அந்நஷ்டத்தி ஞெரு பாகமேனும் அவர்களிடம் பெருமலும் அவர்களை நீக்கவேண் டியது முறையாயின் நீக்கியும் வேறெரு கடைக்குத் கீழாளாக அமர்த்தல் நியாயமெனத் தோன்றின் அங்ஙனஞ் செய்தும் பொறுமை காட்டியது வியப் பினும் வியப்பே.

'குற்றம்புரித லெனக்கியல்பே
குணமாக்கொள்ள லுனக்கியல்பே சிற்றம்பலவா,'
'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பது கடனே' எனவும்

பெரியோரருளிச் செய்தபடி 'பொறுமை' என்பது தெய்வகுணமும் தெய்வானுக்கிரக சம்பன்னராகிய சீரியர் குணமுமாமென அறியக்கிடக்கின்றது. இக் குணஞ் செட்டியாரவர்கள்பாற் றலைசிறந்துநின்றதென் பதை அவரை அறிந்தாரொருவரும் மறுரென்பது திண்ணம். செட்டியாரவர்கள் கூட்டாளிகளுள்ளும் அடுத்தஆள் முதலியவர்களுள்ளும் பெரும்பான்மை யோரும் அவர் சந்ததியாரும் நன்னலமும், பொன் நிலமும்பெற்றுக் குறையின்றி இன்றும் வாழ்வார்கள். செட்டியாரவர்களுக்குத் துரோகம் நினைத்த சிலரே விருத்தியடையவில்லை. செட்டியாரவர்கள் சில துரோகி களால் நஷ்டமடைந்தமைக்கு வருந்தாது அவர்கள் செல்வத்தோடு நன்னிலை யுருமைக்கு வருந்துவார்கள்.

பொருளீட்டலையே பெருநோக்கமாகவும் பேரற மாகவும் கொண்டுள்ள வைசியமரபினர் பொருளிழப்

புழி மிக்க மனப்புழுக்கமுற்று, தமது வியாபார வட்டித் தொழில்களில் இனிமேலும் இத்தகைய செய்தி நிகழாதபடி குற்றஞ்செய்தோரைத் தண்டித்து அலக்கழிக்க, நமது செட்டியாரவர்களிடம் இக்குணம் வாய்த்திருந்தது விந்தையேயாம்.

'எல்லார்க்கு நன்றாம் பணிதலவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து'

எனப் பணித்தார் பொய்யில் புலவர். அதற்குப் பரிமேலழகர், "பெருமிதமின்றி அடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றேயெனினும் அவ்வெல்லாருள்ளுஞ் செல்வமுடையார்க்கே வேறொரு செல்வமாஞ் சிறப்பினையுடைத்து' பெருமிதத்தினைச் செய்யுங்கல்வியுங் குடிப்பிறப்புமுடையார் அஃதின்றி அவைதம்மானே அடங்கியவழி அவ்வடக்கஞ்சிறந்து காட்டாதாகலின் 'செல்வர்க்கே செல்வந்தகைத்து' என்றார். செல்வந் தகைத்தென்பது மெலிந்து நின்றது. பொதுவென்பாரையுமுடம்பட்டுச் சிறப்பாதல் கூறியவாறு" என உரை வகுத்தார்.

விளக்கவுரை : பெருமிதமாவது செருக்கு. அஃதாவது.

'நோக்கிருந்து மந்தகராய்க் காதிருந்துஞ் செவிடாய்
நோயில் லாத
வாக்கிருந்து மூங்கையராய் மதியிருந்து மில்லாராய்
வளருங் கைகாற்
போக்கிருந்து முடவராய்ப் புலனிருந்து மில்லாத
பூட்சி யரா
யார்க்குமிந்த தனமதனை யாக்கமென நினைத்தனையே
யகக்கு ரங்கே'

என்றவாறு கண்ணிருந்துங் காணுது, காதிருந்துங் கேளாது, வாக்கிருந்தும் பேசாது, அறிவிருந்தும் இல்லாது, கைகால்களிலிருந்தும் இயங்காது, இங்ஙனம் ஐயறிவிருந்தும் அவற்றைக்கொள்ளாது மயங்குதல்

வியாழபகவான் வானகம்வர அங்கு

அடக்கம். அக்காலை வெள்ளையானையின்மீது பவனி வந்த இந்திரனே ஆயிரங்

கண்களிருந்தும் அக்குருவின் வருகையை கண்டானில்லை யாகலின் இரண்டு கண்களுடைய மண்ணவரிற் செல்வச்செருக்குடையார் தம்மிடம் வந்தவர்களைக் காணமுடியாது என்னும் பெருமையை ஒரு கவி,

'அண்ணலங் குரவன்வர் தணுக வாயிரங்
கண்ணுடை யிந்திரன் கண்டிலா னெனின்
மண்ணிடைக் காண்பர்கொல் வந்துற் ருர்தமை
யெண்ணரு நிதிச்செருக் செய்தி ஞரரோ?'

என்றதூஉங் காண்க. பெருமிதத்திற்கு வீரம், பிரபுத்துவம் முதலிய பிறகாரணங்களு மூளவேனும். செல்வம், கல்வி, குடிப்பிறப்பு இம் மூன்றையுமே எடுத்தது. 'முக்குறும்பாவன: தனமதம், குலமதம், வித்யாமதம்' என்னும் ஒரு சாரார் மதம்பற்றியாம். 'கற்றறிவார் கண்டதடக்கம்' எனவும்.

'சங்குடைத் தனைய வெண்டா மரை மலர்த் தடங்கள் போலு
நங்குடித் தெய்வங் கண்டீர் நமரங்கா ளறிமி னென்ன'

எனவுமிருத்தலின், கல்வி, குடிப்பிறப்பு ஆகிய இவற்றுல் பணிவுண்டாதல் அத்துணைச் சிறப்பிற்றன்றென்னுர், இதனுற் பெருஞ்செல்வர்க்கு அடக்கமுண்டாதன் மிக வரிதென்பது வெள்ளிடை விலங்கலென விளங்குகிறது. நமது செட்டியாரவர்கள் பெருஞ்

செல்வராயினும் அவரிடம் அடக்கம் நிரம்பவுண்டு ஒவ்வொருவரிடத்தும் அவரவர்க்குத் தக்கபடி விநய மாகவே சொல்லாடுவர். தம்மிடம் குற்றேவல் செய் பவர்களேயும் வைததில்லை. அவர் வாய் வசைசொல் பயிலாத வாய்.

ஒருநாட்காலை தமது தோட்டத்திலுள்ள வண்டி மாட்டுக்கொட்டிலைச் சுத்தி செய்யும்படி தம் பண்ணைக் காரருளொருவனுகிய பாட்டயன் என்னும் பஞ்ச மனுக்குக் கட்டளையிட, அவன் அவ்வே லையைச்செய்து கொண்டிருக்கையில் இயற்கையிற் சாதுவாகிய வண்டி மாடொன்று எக்காரணம்பற்றியோ வெருண்டோடி வந்து அவன்மேற் பாய்ந்து கொம்பினுல் அவன் வயிற்றிற் குத்திவிட, அவன் ஆவி துறந்தனன். இந்த நிகழ்ச்சி திருவிளையாடற் புராணத்துட் பழியஞ்சின படலத்திற் கூறப்படுவதொன்றைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது. திருவிளையாடற் புராணம் பழியஞ் சின படலத்திற் கூறப்படுவது: 'குலோத்துங்க பாண் டியனென்பான் மதுரையிற் செங்கோல் செலுத்து நாள் ஓர் அந்தணன் தனது கற்புடை மனைவியொடும் பொற்புடைக் குழவியொடும் திருப்பத்தூரினின்றும் புறப்பட்டு மாமனுர் வீடு செல்ல மதுரைமாநகர் நோக்கி, வருகிறவழியில், தாகவிடாய்கொண்ட மனை வியைக் குழவியுடன் பெரியதோ ராலமரத்தடியில் விட்டு நீர் கொணரச்சென்றுன். அவ்வாலமரத்தில் நெடுங்காலமாய்ச் சிக்குண்டிருந்ததோரம்பு காற்று லேயுண்டு வீழ்ந்து அப்பார்ப்பனி வயிற்றின் ஊடுரு விற்று. அவளும் உயிர் துறந்தாள். அத்தருணத்தில் அம்பேறிட்ட வில்லேந்தியவனுன வேடனெருவன்

வெயிற்கு ஒதுங்கி அவ்வாலடியில் நின்றான். நீர் கொணரச் சென்ற அந்தணன் நீரோடு திரும்பிவந்து தன் மனைவி இறந்துகிடப்பதைக் கண்டான். இஃது யாவர் செய்தாரென்று நாற்புறமுஞ் சுற்றிப்பார்த் தான்; வேடன் ஒருபுறம் நிற்கின்றான். அவனே செய்தானென்று துணிந்து அரசனாணை கொண்டு அவன் தன்னுடன் வருமாறு செய்து இறந்த மனைவி யைத் தன் முதுகிலிட்டுக் குழவியை இடுக்கி மதுரைமாநகர் நோக்கி வழிநடந்துவந்து பாண்டியன் அரண்மனைவாயிலில் வேடனைவிட்டு மனைவியின் சவத் தையும் இட்டு, "நீதி தவறாத மன்னவ! இது முறையோ!" என்று கதறினான். வாயில்காப்போர் நிகழ்ந்தன யாவும் பாண்டியற்குத் தெரிவித்தார்கள். பாண்டியன் உடனே தன் அரியணையினின்றும் இழிந்து போந்து அந்தணன் நிலைகண்டு வருந்தி விசாரித் தான். அந்தணன் நிகழ்ந்தனகூறி அவ்வேடனே கொன்றானென்றான். அதன்மேலரசன் வேடனது வாய்ப்பிறப்பைக் கேட்டான். அவன் தான் கொன்றது மில்லை கொன்றாரைக் கண்டதுமில்லை என்றான். தான் இட்ட கட்டளைப்படி அவ்வேடனைச் சிறையிலிட்டுத் தண்டஞ்செய்வோர் பலவாறு கடுந்தண்டனை செய்தும் அவன் ஒருசொல்லாகச் சொன்னமையானும், கொன்ற குறிப்பு முகத்திற் சிறிதுந்தோன்றாமையானும், ஒன் றுந் தோன்றாது பாண்டியன் சுந்தரேசப்பெருமான் திருமுன் சென்று நின்று, 'மன்றாடு மணியே! ஒன்று லும் என் ஐயந்தீர்தற்கிடனில்லை. நீரே என் தாழ்வு கெட நிகழ்ந்தவற்றைத் தெரிவித்தல் வேண்டும்' என்று பிரார்த்தித்தான். உடனே 'வணிக வீதியின்

கண் ஒரு வீட்டில் மணம் நடக்கிறது. அந்தணனோடு நீ அங்கு வருவாய். ஐயந்தெளியும்', என்று ஆகாய வாணி கூறக்கேட்டு அவ்வாறே அன்றிரவு அந்தண னோடு அவ்வீட்டில் ஒருபக்கம் மறைந்திருந்தான். அன்று அம்மணமகன் ஆயுள்முடிய யமதூதர்கள் அவன் உயிரைக் கவர வந்தார்கள். பாண்டியனும் அந்தணனுங் கேட்கும்படி வந்த தூதர்களிலொருவன் 'யாம் எவ்வாறு இம்மணமகன் உயிரைக்கொள்வது? அவன் உடம்பிற் பிணியொன்றுமில்லையே! காரண மின்றி உயிர் கொள்ளப்படாதே!' என்றான். அதற்கு மற்றவன் 'அன்று ஆலமரத்தின் சிக்குண்டிருந்த அம்பை காற்றால் விழும்படிசெய்து எவ்வாறு பார்ப் பணியின் உயிரைக் கவர்ந்தோமோ அவ்வாறு ஒருபா யத்தால் இவன் உயிரையுங் கவரல் வேண்டும். ஒன்று செய்க, வாத்திய முழக்கொலியால் இவ் வீன்றணிமை யுடைய பசுவை வெருட்டித் தாம்பறுத்துவிட்டு இவனுயிரைக் கவர்க' என்றான். பாண்டியன் அந் தணனை நோக்கி, 'கேட்டீரோ? மனந்தெளிந்ததோ?' என்றான். அதற்கு அந்தணன் 'நிற்க, இம்மணமகன் இவ்வாறு இறப்பானேல், என் மனைவி இறந்தது அவ் வாறெனக்கொள்வன்' என்றான். மணவினை தொடங்கி னார்கள். பலவாத்தியங்களு முழங்கின. அம் முழக் கொலியான் வெருண்டு கட்டிய தாம்பு அறுபட அப் பசுவானது ஓடிப்போய் மணமகனை முட்டியது; அவன் அக்கணமே உயிர் இழந்தான். ஐயம் நீங்கி யாவர்க் கும் இதுகூறி மகிழ்ந்து அந்தணனுக்கு மறுமண முடிக்கப் பொருளுதவி, விடைதந்து, சிறையிலிருந்த வேடனுக்கு இடப்பட்ட விலங்கை கழற்றுவித்துத்

'தெளியாது யாங்கடுந்தண்டஞ் செய்தோம்; பொறுத்துக்கொள்க' என்று இரந்துவேண்டி அவனுக்கு வேண்டியன கொடுத்துவிட்டான் பாண்டியன்' என்பது.

பரட்டயன் இவ்வாறு உயிர் துறந்தமை அறிந்த குற்ற விசாரணை அதிகாரிகள் (Police Authorities) மிக்க ஆரவாரஞ் செய்தார்கள். மேற்கூறிய வண்டிமாட்டுக் கொட்டிலுக்குப் பரட்டயன் சென்றதும் அங்கு அவனை மாடுமுட்டிக் கொன்றதும் தமக்கு ஒன்றுந் தெரியாதென அக்குற்றவிசாரணை அதிகாரிகளிடம் வாக்குமூலங் கொடுக்கும்படி தமது பந்துக்களிற் பலர் எவ்வளவோ வற்புறுத்தி சொல்லியுஞ் செட்டியாரவர்கள் தமது மனச் சான்றிற்கு மாறாகப் பொய்கூறச் சம்மதித்தாரில்லை. உள்ளதை உள்ளபடி உரைத்தார். அங்ஙனம் உரைத்தமை அறிந்த அதிகாரிகள் அவர் சத்தியத்தை வியந்து கொண்டாடி அதன்மேல் நடக்கை யொன்றும் நடத்தாது விட்டுவிட்டனர். செட்டியாரவர்கள் ஊழின் வழியால் மரணமடைந்த பரட்டயன் மனைவி மக்களுக்கு இரங்கி அவர்கள் ஜீவனத்திற்கென ஒரு தொகையைக் கொடுத்துதவினார்கள்.

வாய்மை.

'ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்,
றீதுண்டோ மன்னு முயிர்க்கு'

என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார். ஒருவன் தன் குற்றங் காண்டலி லிந்திரனாக, பிறன் குற்றங்காண்டலில் 'திருதராஷ்டிரனாக' என்ன்றான்றோர் கூறும் நீதிமொழியுமொன்றுண்டு. ஆயினும் பிறன்

தங்குற்றங் காண்டல்.

குற்றம் ஒருவனுக்குத் தெரியுமேயன்றித் தன் குற்றம் தனக்குத் தெரியாது. இஃதுலகவியற்கை. தன் குற்றங் காண்பவனெவனோ அவனே திருந்துவன் அவனே நல்வழிப்படுவன். மற்றையன் திருந்துவதற்கும், நல் வழிப்படுதற்கும் வழி ஏது? செட்டியாரவர்கள் தம் குற்றங் காண்டலின் நோக்கம் பெரிதுடையார். தம் மிடம் ஒரு சிறிய குற்றமிருப்பதாகத் தமக்குத்தோன் றினும் உடனே தம்மைத் திருத்திக்கொள்ள முயல் வார்கள். சில வாரங்களோ அல்லது சில மாதங்களோ ஒவ்வொரு நாளும் அக்குற்றமே முன்வந்து நிற்கும்; நாளடைவில் அக்குற்றந் தேய்ந்தொழியும்.

பிராமணர்கள் தம்மிடம் வரவும், வேலையில் அமர வும் அவர்கள் பிரியப்படவில்லை. உயர் குலத்தாரை ஏவல் கொள்ளுதலும் வருவித்தலும் பாவச்செய்கைகளெனக் கருதியோ, அன்றி வேறெக்காரணம் பற்றியோ, அங்ஙனம் அவர்கள் பிரியப்படவில்லையென்பதை யாம் அறிந்தோமில்லை.

*மேலோரை ஏவல் கொள்ளாமை.*

செட்டியாரவர்கள் தினந்தோறும் காலை 5 மணிக்கு நித்திரை தெளிந்தெழுந்து காலைக்கடன்களை முடித்து நீராடிச் செபஞ் செய்து பின் நிருபமெழுதுவார்கள். ஒருவன் யாதாயினும் ஓர் அரும்பொருளைத் தேடினானெனினும், அன்றி, ஓர் அருஞ் செயலைச்செய்து முடித்தானெனினும் அப்போது தெய்வத்தை மறப்பன், தன் முயற்சியாலும் மதிநுட்பத்தாலும் செய் கைத் திறமையானும் அப்பொருளைத் தேடினதாக, அன்றி அச்செயலைச் செய்ததாக நினைத்துக்களிப்பன்,

*தெய்வபக்தி.*

இவர்களோ செல்வம், நன்கு மதிப்பு, சொற்செலவு, அதிகாரம் முதலிய எல்லா நலங்களும் நிரம்பப்பெற்று வைத்தும் தெய்வத்தை ஒருபோதும் மறந்தார்களில்லை. யாவுஞ் சிவன் செயல் 'அவனன்றி யோரணுவு மசையாது' 'இடை நடுவிற் குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியா திறக்குங் குலாமருக் கென்சொல்வேன் கச்சி யேகம்பனே' 'மிடுக் குற்றுப் பற்றினு நில்லாது செல்வம், விடுக்கும் வினையுலந்தக்கால்' இன்னோரன்ன உறுதிமொழிகளின் பொருள் இவருக்கு அடிக்கடி மனத்தின் கண் முனைந்து நிற்கும். இவர்கள் இருக்கினும் நிற்கினும், உண்ணினும் உறங்கினும், உடுப்பினும் நடப்பினும் தும்மினும் இருமினும், பஞ்சாக்ஷர மகா மந்திரத்தைச் சொல்வார்கள். சில சமயங்களில் 'அருணசல' மென்பார்கள்; மற்றுஞ் சில சமயங்களில் 'பாடலேஸ்வரா' என்பார்கள். இன்னும் சில சமயங்களில் தெய்வநாதா' என்பார்கள். திருப்பணி விஷயமாக அடிக்கடி பற்பல யோசனை செய்வார்கள். எந்தத் திவ்ய தேசத்தில் திருக்குளமில்லை, எந்தத் திருப்பதியில் திருவாபரணமில்லை, எந்தத் தலத்தில் வாகனமில்லை, எந்த க்ஷேத்திரத்தில் நந்தவனமில்லை, எந்தச் சிவநகரிற் பசுமடமில்லையென்று விசாரிப்பார்கள். சிவ சின்னப் பொலிவொடு சிவனடியார்கள் வரின் மனமகிழ்ந்து வரவேற்றுப் பணிவொடு அவர்கள் சொற்கேட்டு அவர்களுக்கு வேண்டியன விரைவிற் செய்து மகிழ்விப்பார்கள்.

தமது கூட்டாளிகள் வியாபார சம்பந்தமாகத் தமது கடைக்குப் புறப்படும்போது தம்மிடம் விடை

பெற்றுச் செல்லவருங்கால் அவர்களுக்கு விபூதிப் பிரசாத மளித்துச் சிறிது நேரஞ் சிவத்தியானத் திருந்து ஈசன் பெயரான் ஆசிகள் மொழிந்து விடை தருவார்கள். இவர்களிடம் வேஷமும் பகட்டும் இலே சமுமில்லை. ஆகலின் பக்தி வெளித்தோன்றாதேனும் அந்தரங்கத்தில் விசேஷ: பக்தியுண்டென்பதிலெள் ளளவுஞ் சந்தேகமில்லை. ஆண்மகப்பேற்றைக் குறித்து இவர்கள் செய்தனவென முன்னர்க் காட்டிய பிரயத் தனங்களாலும் இவர்களது பக்தி வெள்ளிடை விலங் கலெனத் தெள்ளிதிற் புலப்படுகிறது.



# அத்தியாயம் 11.

## மகனுர்க்கு வைசூரி.

செட்டியாரவர்கள் தமது குமாரர்முத்தையா செட்டியாரவர்களை வியாபார முறைகளிற் பயிற்றுவிக்க நினைத்துக் கூடலூரிலுள்ள தமது கடைக்குச் செலவிட்டார்கள். அவர்கள் அங்குச் சென்று அங்ஙனமே வியாபாரமுறைகளைப் பயின்று வருங்கால் குரோதிஞூ (1904)ல் வைசூரி வார்த்தது. அச்செய்தி தெரிந்தவுடன் தாய் தந்தையரிருவரும் அங்குச்சென்று அவ் வைசூரியைக் குணப்படுத்தற் கேதுவான பல முயற்சிகளைச் செய்தார்கள். சூழல்களைச் சுத்தமாகவைத்தும், வேப்பிலைக் காற்று வீசும்படி செய்தும், வெம்மையை தணித்தற்குரிய ஆகாரங்களளித்தும், மாரியம்மைக்கு அபிஷேக நைவேத்ய முதலியன சிறப்பொடு நடத்தியும் ஊரார்க்கெல்லாம் வெள்ளரிக்காய், நீர்மோர் முதலியன வழங்கியு மிக்க கவலையொடு குணம் நாடினர்கள். வைசூரி எளிதினிறங்கிக் குணப்பட்டது.



## அத்தியாயம் 12.

### சில குழப்பங்கள்.

இவர்களது ஐக்கிய வியாபாரம் நாளுக்குநாட் பலபடியாலும் மேலோங்கி வளர்தலைக்கண்டு பொறாமைகொண்ட சிலர் பல சூழ்ச்சிகளால் இவர்கள் ஐக்கியத்தை குலைக்க முயன்றார்கள். அவர்கள் முயற்சிகளெல்லாம் முற்றும் பயனற்றுப்போயின. செட்டியாரவர்கள் கட்டிய கட்டை உடைக்க ஒருகாலும் முடியாது. அவர்கள் கூரிய மதிகொண்டு ஐக்கிய விருத்திக் கநுகூலமான பல ஏற்பாடுகள் செய்துள்ளமையின் இனியும் இவ் விலாசத்தார் நெடுங் காலங் கூட்டுக் கடையாகவே நடத்திவருவார்களாக!

செட்டியாரவர்கள் பலவிடங்களில் பலசாதியார்களோடு பலவகை வியாபாரஞ்செய்தும் நியாய சபையில் வழக்குத் தொடுப்பதற்கு விரும்பினாரில்லை. கல்கத்தாப் பெரிய கடையில் கீலகவூ (1908) காரியத் தலைவராகவிருந்து அங்குள்ள ஏனை இரண்டு கடைகளையும் மேற்பார்த்து வந்த நயனப்ப செட்டியாரென்பார் சத்தியந் தவறி நற்சமயம்கண்டு பல நூறாயிரம் ரூபாய்க்கு உலைவைத்துவிட்டமையின், நயங்காட்டியும், புத்திமதிகளைச் சொல்லியும், பாக்கிகளில் சிலவற்றைத் தாம் ஒப்புக்கொண்டும், சில நூறாயிரக் கைப் பொறுப்புடன் அவரை உடனே விலக்கிவிட்டார்கள். முற்றும் நம்பிய இவர்களுக்குத் துரோகஞ் செய்தமையின், ஷை நயனப்ப செட்டியார் அது முதன்

புத்திமாருட்டமாயிருந்து மரணமடைந்தனர். ஷை நயனப்ப செட்டியாரால் ஏற்பட்ட சில ஒழுங்கீனமான கொடுக்கல் வாங்கல் வியவகாரங்களிற் ரும் நியாய சபைக்குப் போகவேண்டிய ஆவசியகமிருந்தும், தாம் நேரிற் போகாது தமது காரியஸ்தர்களைக் கொண்டே பல வழக்குகளை நடத்தி முடித்தார்கள்.

இரண்டு மூன்று முறை பணமுட்டு வந்தபோது ஆக்கங்கண்டு பொருது மனம் வெந்த இனத்தார் பழியைப் பரப்பினாரேனும் தெய்வ சங்கற்பத்தால் இவர்களுக்கு வந்த இடர் சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிற்று.

திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீ தோகையம்பிகையின் கும்பாபிஷேக சமயத்தில் இக் குடும்பத்திற்குக் கல்கத்தாவில் நேர்ந்த வர்த்தக நாணயக் குழப்பம் பெரிது. இரண்டு நாட்களில் 800 ரூபாய் வரையும் தந்திச் செலவு செய்தும், அநேக ஊர்க் கடைகளி லிருந்து பணம் அவ்விடத்திற்குப் போய்ச் சேரும்படி செய்தும், பரிச்சயமானவர்களுக்கு விஷயத்தைத் தெரிவித்தும், நாணயம் நிலைக்கும்படி செய்தார்கள். ஒரு பொற்காசு (Sovereign) ஒன்றிற்கு விலை முன் பின்னாக 12 ரூபாயாயிருந்தபோது பதினைந்து நூறு யிரம் ரூபாய்க்குப் பிணங்கிலுள்ள இவர்கள் காரியத் தலைவர் தாமே ஓர் அமெரிக்கா வியாபார சங்கத்தாரி டம் (American Company) ஒப்பந்தஞ் செய்துவிட் டார். ஒரே தேதியிற் பிணங்கு நாணயச்சாலை (Bank) யில் ஷை தொகையைச் செலுத்தி ஷை பொற்காசுகளைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று மேற்கண்ட அமெ ரிக்கா சங்கத்தாரிடமிருந்து செய்தி வரவே இவர்

களது குடும்பத்தில் மற்றையர்களெல்லாம் மனங் கலங்கினர்கள்: எப்படிமுடியுமோவென்று கையை நெரித்தார்கள். செட்டியாரவர்களோ சிறிதும் கவலாது அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து ஷை பொற்காசுகள் பினங்குத் துறைமுகம் வருமுன்னமே சொற்ப லாபத்திற்கு ஒப்பந்தம் பேசி விற்று விடும்படி செய்தார்கள்.



## அத்தியாயம் 13.

### தருமதானங்களும் போது நன்மைகளும்.

#### திருக்கோயிற்றிருப்பணி திருப்பாதிரிப்புலியூர்.

'ஆலயந் தொழுவது சாலவு நன்று' என்றார் அவ்வைப் பிராட்டியார்; 'திருக்கோயிலில்லாத திருவிலூரும்' என்றார் ஆசாரிய சுவாமிகள். இவற்றான் ஒவ்வோரூரிலும் ஆலயமிருக்க வேண்டியது அவசியம் என்பது விளங்கும். அது சரியையர் கிரியையர்க்கேயன்றி யோகியர்க்கும் ஞானியர்க்கும் இன்றியமையாதது. என்னே? ஞானியர்க்குமா? பரம்பொருளோடு இடையறாது ஒன்றி நிற்கும் அவர்களும் ஒருக்கால் அதனிற் பிரிந்து உலகத் தோற்றம் பெறுவாராயின் அவர்கள் இவ் விருள்தரு மாஞாலத்தின் வயப்படாதபடி அவர்களுக்கு முன்னை நிலைமையை ஞாபக மூட்டி அவர்களை அந் நிலைமையிற் சேர்ப்பன திருக்கோயில்களே. ஆகலின், ஒரு ஞானி ஊனக்கண் திறக்குமிடத்தில் ஓராலயம் இருத்தல் வேண்டும். எந்த ஞானி எந்தவிடத்திற் கண்விழிப்பனென்று யாவரால் அறியமுடியும்? அதனால், ஊருக்கொரு திருக்கோயிலேனும் இருத்தல் வேண்டும். ஞானிக்கே திருக்கோவில் இன்றியமையாத தொன்றாயின், ஏனைச் சரியையராதியர்க்குச் சொல்வானேன்? இத்தகைய திருக்கோயில்களுட் பழைமையான் மிக்

கன உருகுலைந்து நிற்பின் அவற்றை வல்ல தபதிகளைக் கொண்டு சிற்ப சாஸ்திர விதிப்படி கட்டுவிப்பார் அடையும் பெரும் பயனைப்பற்றியுஞ் சொல்வது மிகையேயாம். இம்மை, மறுமை, வீடு ஆகிய மும்மையும் தரத்தக்க இத்திருக்கோயிற் றிருப்பணியே சிவஞானதானங்களுட் சிறப்புடைத்தாம்.

சமணர்கள் பல்லவராயனென்னும் அரசனது ஆக்ஞைபெற்று நமது பரமாசாரியராகிய திருநாவுக்கரசு நாயனாரைக் கொல்ல விரைந்து சிலபிரயத்தனங்கள் செய்தும் அவற்றுளொன்றும் பலியாமையின் அம் மெய்ஞானத் திருவாளரைக் கல்லொடு கட்டிக் கடலிலிடப் பிறவிக் கடல் கடந்து முத்திக் கரை படர்பவர்போல

'விருப்பாதிகளான் வெதும்பி நின்றேனை வியனருளாற்
திருப்பாதி வண விட்டிருந்தனையேலது செப்பமன்றே
மருப்பாதிரி மாதவி சண்பகம் வாழை மன்னுவளத்
திருப்பாதிரியூரிற் கரைவருந் தெள்ளமுதே.'

என்றவாறு அவர் கரையேறின மகாஸ்தலமாகிய திருப்பாதிரிப் புலியூர் ஆலயம் மிகப் பழுதுபட்டிருந்தமை அறிந்த செட்டியாரவர்கள் முன்பு அம்மையார் திருக்கோயிற் றிருப்பணியும், பிலவங்க (1907-08) ஹூத்தில் ஸ்ரீ தோகையம்பிகை கும்பாபிஷேகமும், செய்து, அதன் பின்பு சுவாமி திருக்கோயிற் றிருப்பணி தொடங்கிப் பிங்கள ஹூ ஆனிமீ 15வ (1917)ல் ஸ்ரீ பாடலேஸ்வர சுவாமி கும்பாபிஷேகமுஞ் செய்து முடித்தார்கள். திருப்பணிக்கும் மகா கும்பாபிஷேகங்கட்கும் சென்ற தொகை பன்னிரண்டரை லக்ஷம் என்ப. தனவைசியர் இதுவரையும் செய்த திருப்

பணிகளிலும், மகா கும்பாபிஷேகங்களிலும் இவர்கள் செய்தனவற்றைப் போலச் சிறப்பும், முறையும் விதரணையுமானது வேறொன்றில்லை யென்றே மகா கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்த எச் சாதியினரும் எப் படியினரும் ஒருபடித்தாய்க் கூறினரென்ப. அக்காலை புலவர் சிலர் மகா கும்பாபிஷேக வைபவம் பற்றிச் சில கவிகளும் இயற்றினர். அன்னமயம் கொண்டெடுத்தவுடல் நமது உடல், நீராவியந்திரத்திற்கு நீரும் நிலக்கரியும் எவ்வாறு இன்றியமையாதனவோ அவ்வாறே இவ்வுடம்பிற்கு நீரும் சோறும் இன்றியமையாதன. அவை இரண்டும் ஒவ்வொரு நாளும் உரிய காலங்களில் உட்கொள்ளப்படவில்லையெனில் பசி தாகங்கள் உண்டாம். நீரகப்படுதல் எளிதாகலின் தாகத்தைத் தணித்தலும் எளிதாம். சோறும் அகப்படுதல் அத்துணை எளிதன்றாதலின் பசிமேன் மேல் வளர்ந்து தலைக்கொள்ளும். அதைப் பொறுத்தல் கூடாது. அதனால் மற்றை நலங்கள் யாவும் அழியும் அதனாலன்றோ,

'மானங்குலங் கல்வி வண்மை யறிவுடைமை
தானந்தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்துபோம்' எனவும்

'பசியா லழகாண்மை பாழின்பு மோகம்
சுசியாவி வார்த்தையிவைசோரும்' எனவும்

'குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி' எனவும்

பிறவாற்றூனும் மூன்னோர் பலர் அப் பசியின் கொடுமையைப் புனைந்துரைத்தனர். மற்றெல்லா நலங்களும் அழியவரும் அப்பசியைத் தணித்தலினும் சிறந்தவோரறம் இன்று. கோதானம், பூதானம், அஜ தானம், திலதானம், கம்பளதானம், கஜதானம், சொர்ன தானம், கன்னிகாதான முதலிய எத் தானமும் இவ் வன்னதானத்தை யொவ்வா. சிவதருமோத்தரமென்னும் ஆகமமும் 'அன்னதான மறைந்தவற்றுளதிக பலமே' என்றும், வடநூலும் 'நஹி நஹி பஹூ தானம் அந்நதாநச் சமாந:' எனப் படிக்கும். பட்டினத்தடிகளும் 'பசித்தோர் முகப்பார்' என்றார். ஏழைகளிற் சிலர் எய்திய பசியைத் தணித்தற்கு முடியாது மனம் புண்பட்டு நின்ற ஒரு மகானும் யானோ விவ் வேழை கடம், அருப்பசிக்கு மருந்தளிப்பே னங்கோ விங்கென்னூலே துரும்பசிக்க முடியாதே சோதிநடப் பெருமானே' எனப் பாட்டிசைத்தார்.

நமது செட்டியாரவர்கள் 'அன்னதானமே தலையறம்' என்னும் உண்மை கடைப்பிடித்து ஸ்ரீ தோகையம்பிகையார் கும்பாபிஷேகத்திற்கும் ஸ்ரீ பாடலேசுவர சுவாமி கும்பாபிஷேகத்திற்கும் ஏழைகளும் பல ஊர்களிலிருந்தும் ஒரு துன்பமின்றி வந்து கண்பெற்ற பயனைக் கண்டு களித்துப் புண்ணியத்தைக் கைக்கொள்ளும்படி இருப்புப்பாதை வண்டியிற் கைப்பொருட் செலவின்றி ஏறிவர ஏற்பாடு செய்ததுமன்றி அங்ஙனம் கைப்பொருட் செலவின்றிச் செல்லும் எளிமைபற்றி எண்ணிற் கடங்காது பலமுகமாய் வந்து திரண்ட அத்தனை பேருக்கும் சாதி சமய வேறுபாட்டிற்குத் தக்கவாறு நக்கல், பருகல், உண்

டல், தின்றல் என்னும் நால்வகை உண்டியும், கைப்பு, உறப்பு, துவர்ப்பு. இனிப்பு, புளிப்பு என்னும் அறு சுவை அமையச் சிற்றுண்டி வகைகள் பற்பலவற்ருேடு ஊரெங்கும் நெய்மணக்க எங்கெங்கும் அன்னம் பரிமாறினுர்கள். வந்தவர்கள் யாவரும் வயிருரவுண்டு தேக்கித் தொந்திதடவிச் செட்டியாரவர்களை வாயார வாழ்த்தினுர்கள். ஏழைச் சனங்கள் 'அடடா! என்ன சாப்பாடு! என்ன சாப்பாடு!! என்ன அரிசி! என்ன அரிசி, ஐயா! முனை முரியவில்லை. முல்லையரும்புபோல இருக்கிறது! என்ன பருப்பு! என்ன பருப்பு அப்பா!! என்ன இனிப்பு! என்ன இனிப்பு!! நெய்யென்ன புத்துருக்கு நெய்யோ! 'மூடநெய்பெய்து முழங்கை வழிவர' என்னும் சுருதி இன்று அனுபவசித்தமா யிற்று. ஒரு காய்கறி வகையிலாது உப்பு ஒருகல் ஏறுமா, ஒருகல் குறையுமா? காரம்புளிப்பு எல்லாம் தராசில் நிறுத்திச் சேர்த்தார்களோ? என்ன பாகம்! என்ன பாகம். அம்மா!! நளபாகமோ? அல்லது வீம பாகமோ? சிற்றுண்டிகளைச் செப்பவுந்தரமோ? என்ன சாப்பாட்டிலும் வெறுப்புத்தோன்றவில்லையே! விலாப் புடைக்க உண்டோம். இன்னும் வயிறுதான் இல்லை. உண்டிக்கு என்ன? தெவிட்டாத அமிர்தம்! உண்டிக் குத் தக்க பாக்கு வெற்றிலை. என்று பலபடி வியந்து பேசினுர்கள். மகா கும்பாபிஷேக காலங்களில் அன்ன தானத்தை இத்துணைச் சிறப்போடும் விதரணை யோடும் நடத்தினதோ டமையாது நமது செட்டியா ரவர்கள் நீர் வசதி முதலியனவும் செய்துவைத்தூர் வைத்தியசாலைகளையும் ஆங்காங்கு ஏற்பாடு செய்தார் கள்; அத்தகைய பெருங்கூட்டத்திலே களவு முதலிய

கெடுதிகள் நேராமைக்கு வேண்டியவெல்லாவற்றை யுஞ் செய்தார்கள். செட்டியாரவர்களுக்கு அறுபதாவ தாண்டு நிறைந்துழித் தமது மரபினர்போல உற்சாகத் துடனும் ஆடம்பரத்துடனும் சஷ்டிபூர்த்தி சாந்தி செய்துகொள்வது முறையாயிருக்கவும் அவ்வழியிற் பொருட்செலவு செய்ய மனம் வாராது அவ் விசே ஷத்தை முன்னிட்டு நாற்பதினாயிரம் ரூபாய்வரையுஞ் செலவுசெய்து திருப்பாதிரிப்புலியூரில் திருக்கோயில் கொண்டருளும் ஸ்ரீ தோகையம்பிகையர்க்குப் பொன் அங்கி செய்து சாத்திக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தார் கள். உச்சிக்காலக் கட்டளையும் குழித்தளிகையும் என்றும் நடைபெறத்தக்க ஏற்பாடும் நாடோறுங் காசி யிலிருந்து கங்காதீர்த்தந் தருவித்து ஸ்ரீ பாடலேஸ்வர சுவாமிக்கும் ஸ்ரீபிருகந் நாயகியார்க்கும் அபிஷேகஞ் செய்தற்குரிய ஏற்பாடுஞ் செய்து வைத்தார்கள். எண்பதாவதாண்டு நிறைந்துழிச் சதாபிஷேகந் தாம் செய்து கொள்வது முறையாயிருக்கவும் அவ்வழியிற் பொருட் செலவு செய்ய மனம் வாராது அவ் விசே ஷத்தை முன்னிட்டு நூற்றறுபதினாயிரம் ரூபாய் வரையுஞ் செலவு செய்து அன்னசத்திரம் ஒன்று ஏற்படுத்தினார்கள். அதனுள் ஒருபக்கத்தில் படிக்கு மிடமும், புத்தகசாலையும் அமைத்தார்கள்.

## ஆகம பாடசாலை:

'வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக' (திருமந்திரம்)

'வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொது சைவ மருஞ் சிறப்பு நூலாம்
(சிவஞானசித்தியார்)

'வேதம் பசு வதன்பால் மெய்யாகமம்'

என்னும் ஆன்றோர் திருவாக்கால் வேதசிவாகமங்கள் இரண்டும் இறைவன் நூலெனவும், அவற்றுள் வேதம் பொது நூலும், ஆகமம் சிறப்பு நூலுமாமெனவும், வேதம் மயக்க நூலும், ஆகமம் தெளிவு நூலுமா மெனவும் அறியக்கிடக்கும். இவற்றுள், வேதாத்திய யனஞ் செய்வார் ஸ்மார்த்தர், வைணவர், மாத்துவ ரென்னும் மூவகைப் பிராமணருமாம் இவர்கள் கணக்கிலும், கல்வியிலும் மிக்கவராய்ப் பரதகண்டம் முழுவதும் பரவியிருத்தலின் வேதபாடசாலைகள் இமசேது வெல்லையுள் எண்ணிறந்தனவுள.

ஆதி சைவப் பிராமணர்கள் ஆராயத்தக்க ஆக மங்கள் காமிக முதல் வாதுளமீறாக இருபத்தெட் டுண்டு. அவற்றுட் சில அருகின, சில அழிந்தன, சில அகப்படாதன; சிலவே முற்றுங் காணப்படுவன. ஆதி சைவப் பிராமணர்களோ கணக்கிற் குறைந்தவர்கள்; அவர்களும் முன்னை மேனிலையி னிழிந்து நிற்கின்றனர் அவர்களுள்ளும் கருவி நூல்களாகிய தருக்க வியா கரண முதலியவற்றினும் பாஷையிலும் அபார ஞான முடையார் அரியர். ஆகவே, உள்ள ஆகமங்களையும் படிப்பாரும் பயன் றெரிவாரு மில்லை. இங்ஙனம், வேத சாரமாகிய ஆகமங்கள் பொலிவழிந்து நிற்கையில் செட்டியாரவர்கள் திருப்பாதிரிப்புலியூரில் ஆகம பாடசாலை யொன்றேற்படுத்தி அஃதென்றும் நடை பெறுதற்கு வேண்டியனவுஞ் செய்தார்கள்.

வெள்ளித்தேர், நந்தவனம் பசுமடம் முதலியன அமைத்தார்கள்.

திருக்குளம் :

திருப்பாதிரிப்புலியூரின்கண் பாடசாலை வைத்து நடத்தி வருபவர்களும், தனவைசியர் நகரங்களிலொன்றாகிய விசுவநாதபுர வாசிகளுமாகிய 'பி. கு. பி.' விலாசத்திற்குரிய குடும்பத்தார், திருப்பாதிரிப்புலியூர் திருக்கோயிலின் சமீபத்திலிருக்கின்ற 'சிவகரதீர்த்தம்' என்னுந் திருக்குளத்தைப் பிரித்துத் தாங்களே திருப்பணி செய்வதாக நமது செட்டியாரவர்கள் குடும்பத்தாருக்குத் தெரிவிக்க, அதற்கு அவர்கள் இன்னும் சிறிதுகாலம் தாமதித்துப் பின் அதைப்பற்றி யோசித்துச் சொல்லுவோமென்று விடைபகர்ந்து நடந்தவற்றைச் செட்டியாரவர்களுக்கு அறிவிக்கச் செட்டியாரவர்கள் 'திருக்கோயில் சம்பந்தமான திருப்பணிகள் எல்லாவற்றையும் இதுவரை நமது குடும்பத்தாரே பிறரை எதிர்பாராது செய்து வந்திருக்க இத் திருக்குளத் திருப்பணியைமட்டும் பிற குடும்பத்தாரைக்கொண்டு செய்விப்பது தகுதியன்று' எனக் கூறி உடனே அத்திருப்பணி தொடங்கித் தாமே அத்திருக்குளத் திருப்பணி முற்றும் செய்து முடித்தார்கள்.

திருவண்ணாமலைத் திருப்பணி :

இவர்கள் குடும்பப் பொதுவில் திருவண்ணாமலையிற் கல்யாண மண்டபம், பள்ளியறை முதலியன கட்டுவித்தும், அர்த்தசாமக் கட்டளை என்றும் நடைபெறவைத்தும், வெள்ளி இரதஞ் செய்துவைத்தும், வெள்ளி ரதவிழா என்றும் நடைபெற முதல் வைத்தும் இருக்கின்றனர்.

திருவசீந்திரபுரத் திருப்பணி:

நந்தவனம், கட்டளை முதலிய முக்கிய தருமங்களைச் செய்தார்கள்.

பூமீசுவர ஸ்வாமி திருப்பணி:

கடியாபட்டியைச்சேர்ந்த கானப்பேட்டையிலுள்ளது பூமீசுவர ஸ்வாமி திருக்கோயில். புதுக்கோட்டை இராமசந்திர மகாராஜாவிற்கு முன்னுளிற் கண் தெரியாதிருந்தமைபற்றிப் பிராமணர்களுக்குத் தர்மாசனமாய்க் கொடுக்கப்பட்ட பூமியுடன் சேர்ந்தது இது. நமது செட்டியாரவர்களுடைய தமையனுர் புத்திரரும் வேதாந்த மடமாகிய திருக்கோயிலூர் மடாலயத்தில் வசித்தவருமாகிய முத்துராமையா காலத்தில் இஃது ஒப்புக்கொள்ளப்பட்டது. அவர் நகரத்தார் உதவி பெற்றுத் திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகமுஞ் செய்து முடித்தார். ஸ்வாமி பெயர் பூமீசஸ்வாமி, அம்மையார் பெயர் பிரமவித்யா நாயகி என்பனவற்றை,

'ஆரானை யலைகடனஞ் சமரர்க்கா வார்ந்தானை
யகன்ற பூமித்
தேரானை யத்துவிதமாய் நின்றூர் சேர்ந்தானைத்
திகழ்பூ மீசப்
பேரானை யரக்கன்றே ணெரியவிரல் பேர்ந்தானைப்
பிறரு ளில்லா
நேரானை யெழிற்கானப் பேட்டைக்க ணேர்ந்தானை
நிசழ்த்தி வாழ்வாம்'

'தன்னெளியா லுலகுயிர்க ளவையீன்ற தற்பரநற்
ருர மென்ன
மின்னெளியார் செஞ்சடையான் விருப்புறவு மகளென்ன
மேவி நின்ருள்

பொன்னொளிர் லொளிகாட்டும் பொற்புடையாள்
போற்றல் செய்வார் [விற்படையாள்
முன்னொளியாள் பிரமவித்யா நாயகிசெஞ் சரணமலர்
முடியின் வைப்பாம்.'

என்னுந் துதிகவிகளானறிக.

முன்பின் நாற்பது ஆண்டுகளாகத் தனவைசியர் மேற்பார்வையில் ஷ பூமீசஸ்வாமி திருக்கோயில் இருந்து வருகிறது. ஆண்டுதோறுந் திருவிழாவும், நித்ய பூசை முதலியனவும் சிறப்பாய் நடைபெற்று வருகின்றன. ஷ திருக்கோயிலுக்கு உள்ளூர் நகரத்தார் நான்கு ஐந்து லக்ஷம் வரை செலவிட்டிருக்கின்றனர். பிரதி வருடமும் பதினாயிரச் செலவில் ஆனி மாதத்தில் பெரிய உத்ஸவமும் நடத்தப்பட்டு வருகிறது. நமது செட்டியாரவர்கள் ஷ திருக்கோயிலுக்கு வெள்ளி இடபவாகனமுஞ் சில ஆபரணங்களுஞ் செய்து வைத்தார்கள்.

தந்திச்சாலை:

இதுவரை அன்னிய தேசங்களிலிருந்து வருந் தந்திகள் இவர்கள் வசிக்கும் இராமசந்திரபுரத்திற்கு நேரே வந்தில. ஷ ஊருக்கு ஐந்துகல் தூரத்திலுள்ள கானாடுகாத்தான் என்னும் நகரத்திலுள்ள தந்திச்சாலைக்கு வந்து அதன்பின் அங்கிருந்து இவர்கள் ஊருக்கு வருவது வழக்கம். மேற்குறித்த பணமுட்டு நேர்ந்த அப்போது தங்கள் நிலைமையையும் நோக்காது பல்லோர்க்கும் உபயோகமாதல் கருதி மிக்கபொருட் செலவு செய்து தந்திகள் தமதூருக்கு நேரே வரும்படி ஏற்பாடு செய்தார்கள்.

புதுக்கோட்டையிலிருந்து திருமயம் போகும் இராஜபாட்டையிலுள்ள கீழத்தே முத்துப்பட்டியில் 'ஜயலக்ஷ்மி விலாஸ்' என்னும் பெயரால் தீர்த்தான் செட்டியார் சத்திரம் ஒன்று கட்டி அங்குப்போக்கு வரத்தாயுள்ள பாட்டைசாரிகளுக்குச் சிற்றுண்டி நீர் மோர் முதலிய பல வெறுப்பவளித்தும், கால்நடைக் கனுகூலமான பல வசதிகள் செய்தும், சாதுக்களுக்கு அன்னம் பரிமாறியும், திருநாவுக்கரசு சுவாமிகள் பெயரால் தண்ணீர்ப்பந்தர் ஒன்று அமைத்தும், தரும பாடசாலை ஒன்று ஏற்படுத்தியும், மற்றுஞ் சில தருமங்களைச் செய்தும் இருக்கின்றார்கள். கடியாபட்டியில் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர்த் திருக்கோயிலூரில் மடாதிபதியாயிருந்த சிதம்பரய்யா அவர்களிடம் பாடங்கேட்ட மிக்க சுசீலராகிய அருணாசலய்யா அவர்களது சமாதியின் பக்கத்தில் ஒருயர்தரத் தரும பாடசாலை ஏற்படத்தக்க முயற்சி செய்தும், அப்பாடசாலையில் பயிலும் மாணவர்களுக்கு உண்டிக்கென இருபதினாயிரம் ரூபாய் முதல் வைத்தும், அந்த அருணாசலய்யா அவர்கள் பரிபாலித்து வந்த நந்தவனத்தையே இப்போது பிரமவித்யாநாயகியார் வாசகசாலையாகமாற்றியும், அவை என்றும் செவ்வையாக நடைபெறுதற்கு வேண்டியன வெல்லாஞ் செய்தார்கள். அனேக தரும கல்யாணங்கள் செய்து வைத்தார்கள்; உயர்தரப் பாடசாலைகளிலும், கலாசாலைகளிலும் பயிலும் மாணாக்கர் பலர்க்குப் பலவிதத்திலும் உதவினார்கள். திருச்சிராப்பள்ளியில் தாய் தகப்பனில்லாப் பிள்ளைகட்கென ஏற்பட்டுள்ள தரும பாடசாலைக்குத் தக்க பொருளுதவி செய்தார்கள்.

காசி, சிதம்பரம், ஸ்ரீகாளஹஸ்தி, ஸ்ரீகாழி, திருமாணிக்குழி, புதுக்கோட்டை, திருக்கோகர்ணம், திருமெய்யம், பேரையூர் முதலிய சிவஸ்தலங்களில் அகண்ட தீபம், குழித் தளிகை, கஞ்சித் தொட்டி, நந்தவனம், பசுமட முதலிய பல தருமங்களை நீடூழி நிற்கச் செய்தார்கள்.

'ஈகையொ டிரக்கமென் சன்மத்து நானறிகிலேன்'

எனத் தாயுமானவரும்,

'இரப்பதே யீயமாட்டே னென்செய்வான்
றோன்றினே னேழையேனே'

என ஆளுடைய வரசும் பணித்தமையான் ஈகையிரக்கங்களின் மேன்மை இனிது விளங்குகிறது. செட்டியாரவர்களது ஈகையும் இரக்கமும் மக்களளவேயன்றி விலங்கினளவும் நீண்டது. மக்களெனின் றங்கள் குறைகளையும் துன்பங்களையும் வாயிட்டுச் சொல்லிக் கதறி நீங்கிக்கொள்வர். விலங்கிற்கோ வாயில்லை.

'பாண்டி லோடு பலமக்களையு
மிழுத் திழுத் தெய்து மீரமி னெஞ்சுடைப்
பாண்டி லோட்டிகள் பல்காற் சாட்டையிற்
புடைப்பநோ வடைந்துங் பொங்கொளி பரப்பு
கதிரவற் குடைந்துங் கண்க ளிருண்டு
நீரது வேட்டு நிற்குமா னேறு
மாவும் பருக மாற்றிப் பதிக்க
ணெங்கணு நீர்நிலை யிணைதருங் குழையொடு
பொருந்தினை யெய்தரும் புகழ்மன் னினையால்'

என்றவாறு 'சித்திரை வைகாசி மாதங்களிற் பொறுக்க முடியாத கடுமை மிக்க வெயிலில் வண்டியையும் மக்களையும் இழுத்துக்கொண்டு நாள்முழுவதும்

ஓயாது ஓடும் வண்டி மாடுகளும், குதிரைகளும் நீர் விடாய் கொள்ளின் என் செய்யும், பாவம்!' என்று பரிந்து மஞ்சகுப்பம், புதுப்பாளையம், திருப்பாதிரிப் புலியூர், புதுக்கோட்டை முதலிய நகரங்களில் நீர்க் குழையுந் தொட்டியும் ஆங்காங்குக் கட்டுவித்தார்கள். மகா கனம் பொருந்திய புதுக்கோட்டை மகாராஜா (His Highness the Maharajah of Pudukottah அவர்கள் மகா கனம் பொருந்திய சென்னை நகராளி (H. E. the Governor of Madras) லார்டு பெண்ட் லண்டு துரையவர்கள் முதலிய மேன்மக்களே ஷை குழைகளை முதன்முதல் திறந்தார்கள். அவற்றிற்கு வேண்டிய மூலதனம் வைத்து அதனையும் ஷை குழை தொட்டி. வகைகளையும் இராஜாங்கத்தாரிடம் ஒப்பித் தார்கள்.



## அத்தியாயம் 14.

### எப். ஆர். எஸ். ஏ. (F. R. S A.) ஆயினமை

நம் செட்டியாரவர்கள் (லண்டன்) இராஜீய தொழின்முறைச் சங்கத்து அங்கத்தினரா யிலகினர். அது சம்பந்தமான விஷயம் வருமாறு:- லண்டன்மா நகரில் 'இராஜீய தொழின் முறைச் சங்கம் (Royal Society of Arts)' என் றொன்றுளது. வியாபாரம், விவசாயம், கைத் தொழின் முதலியவற்று ளேதேனுமொன்றில் அசா தாரண நைபுண்யம் பெற்றோரே அதன் அங்கத்தின ராதற்குத் தகுதியுடையார். ஐந்து கண்டங்களிலும் சிற்சில தேசங்களின் தகுதியுடையா ரிருப்பதாகத் தெரியின், அவரை அதனங்கத்தினராக அச் சங்கத் தினர் சேர்த்துக் கொள்வர். செட்டியாரவர்களது கௌரவத்தையும், பெருங் கொடையையும், வியா பார சாமர்த்தியத்தையும், மதி நுட்பத்தையும், சென்னை நகராளி (His Excellency the Governor of Madras) அச் சங்கத்தார்க்குத் தெரிவிப்ப, அவர்கள் 1915ஞு த்தில் கனந்தங்கிய செட்டியாரவர்களை அங் கத்தினராக நியமனஞ் செய்தனர். இச்சங்கத்திற் செட்டியாரவர்கள் அங்கத்தினரானது நமது தமிழ் நாட்டிற்கே பெருமையாம். நாட்டுக் கோட்டைச் செட்டிமார்களுள் இவரே இப்பட்டம் முதலில் பெற் றவர்கள்.

---

# அத்தியாயம் 15.

## உருவப்படம்.

பெருஞ் செல்வத்தைத் தேடி 'உதாரகுணத்தானுயர் புகழ் பெற்று விளங்கப் பிறந்தவராதலின், செட்டியாரவர்களுக்கு

> 'அப்பொழு சலர்ந்த வம்போ ருகத்தின்
> மலர்ந்தொளிர் முகமு மாசிலாக் கருணை
> பொதிந்த விழியும் போதக நடையும்
> பரந்த மார்பும் பான்மையி னீண்ட
> கரமுமக் கரத்திடைக் கையிற் கொடியு
> மின்னன பிறவு மெழினலம் புண்ணியமு
> சண்ணிய முயற்சி கனமா திகளெலா
> மரசற் கேயுள வாவன வேய்ந்தமை
> காட்டு மேந்தால்!'

என்றவாறு ராஜலக்ஷணங்கள் யாவும் பொருந்தியிருந்தமையின் நெருங்கிய சுற்றத்தார் யாவரும் அவர்கள் உருவப்படமெடுக்க விரும்பினார்கள். எனினும், செட்டியாரவர்கள் என்ன காரணம்பற்றியோ அதற்கிடந்தரவில்லை. எப்படியாவது செட்டியாரவர்களுக்குத் தெரியாமலே அவர்களது உருவப் படத்தை எடுக்கவேண்டுமென்கிற அபிப்பிராயத்தோடு நெடுநாள் சமயம் பார்த்திருந்தனர். ஒருநாள் தக்க சமயம் வாய்க்கவே, அவர்கள் உருவப்படத்தை எடுத்தே விட்டார்கள்.

---



இராமச்சந்திரபுரம்
தீ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள்
**F. R. S. A. (London)**
சரிதத்தலைவர்

## அத்தியாயம் 16.

### மகனூர் மறுமணம்.

செட்டியாரவர்கள் புத்திரர் முத்தையா செட்டியாரவர்கள் மூத்த மனைவியார் உண்ணாமுலை யம்மையாருக்கு நெடுங் காலமாய் புத்திரோற்பத்தியில்லை. அவ்வம்மையார் விடாரோயாற் பீடிக்கப்பட்டிருந்தமையானும், ஜோ திடர்களைக்கொண்டு ஜாதகத்தை ஆராய்ந்தபோது அவர்களுக்கு மகப்பேறுண்டாகாதென்று தெரிந்த மையானும் சௌமிய-ஹு ஆவணி-மீ 5உ (1909) கோனாபட்டெனவழங்குங் கோநகரிலுள்ள திருவாளர் பழநியப்ப செட்டியாரவர்கள் புத்திரி சௌ பாக்கியவதி இலக்குமியம்மையாரை விவாகம் முடித் தார்கள்.

செட்டியாரவர்கள் இந்நாட்களில் தமது புத்திரருக்குக் குடும்பமுறைகளையும், அஃதொத்து வாழ்தற் கேதுவாகிய மர்மங்களையும், தாமே நேரிலிருந்து எல்லா வற்றையுங் கண்டறிந்தாற்போலப் படிப்பவர் வியக்குமாறு நிருபமெழுதும் வகைகளையும், வியவகார ரகஸ்யங்களையும், நல்வினைவின் காரணங்களையும், கூட்டாளிகளிடமும் பிறரிடமும் நடந்துகொள்ள வேண்டிய விதங்களையும்,

"உறங்குமாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தொண்டரை வையகங் காக்குமால்" (சிந்தாமணி)

"இளைய ரினமுறைய ரெனக்கழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்" (திருக்குறள்)

என்றவாறு தாம் உள்ளூரில் உறங்கி விழுந்தாலும் பல ஊர்களிலுள்ள ஒவ்வொரு கடையிலும் எதிர் நின்று காரியம் நடத்துவதுபோல ஆங்காங்குக் காரியம் ஒழுங்குபெற நடத்தும் வன்மையையுப்பற்றி பல சமயங்களில் பலபடி எடுத்துக்கூறி அவரை உடன் வைத்துக்கொண்டு வியவகாரங்களெல்லா வற்றினும் நன்கு பழக்கினார்கள்.



## அத்தியாயம் 17.

### மகனாரது மூத்த மனைவியார் காலஞ் சென்றமை.

செட்டியாரவர்கள் புத்திரர் முத்தையா செட்டியாரவர்கள் சாசியாத்திரை சென்றார். கங்கையின் நீராடி விசுவேசரைத் தரிசித்து அடுத்துள்ள பல திவ்ய க்ஷேத்திரங்களுக்குஞ் சென்று திரும்பி ஊர் வந்து சேர்ந்தனர். ஊர் வந்து சேர்ந்த மறுநாளே ஏற்கனவே நோய்கொண்டு மெலிந்திருந்த அவரது மூத்த மனைவியாராகிய உண்ணாமுலையம்மையார் தேகவியோக மடைந்தனர். இவ்வம்மையார் தம் நாயகன் திரும்பி வரும்வரையில் உயிர்விடாது காத்திருந்தனர்போலும். நாயகன் இருப்புழி உயிர்நீத்த இவ்வம்மையார் புண்ணியமே புண்ணியம்.



## அத்தியாயம் 18.

### புத்திரர் சாமர்த்தியங் குண முதலியன.

செட்டியாரவர்கள் தமது புத்திரரைப் பல படி வியாபாரத்திற் பழக்கினார்களென்று, முன் உரைத்தாமன்றோ? செட்டியாரவர்களது இச்செய்கை மிகையே யாம். 'மகனறிவு தந்தையறிவு' 'மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்னும் முன்னோருரைகள் மூத்தையா செட்டியாரவர்கள் மட்டில் மிகப் பொருத்தமுடையனவாயின. செட்டியாரவர்களுக்குரிய மதிநுட்பம், வியாபார சாமர்த்தியம், குண முதலிய யாவும் இவ்ரிடத்தும் இயல்பினமைந்திருந்தன.

#### வியாபார சாமர்த்தியம்.

'கழரும் வாணிபத்தி
லிலைமறை காய்போ லிருக்கு மூதியம்
பெருக்கும் விதம்பல பேச்சின் றிறம்பல
நனகுண ரண்ணல்!'

என்றவாறு வியாபார மர்மங்களெல்லாம் எப்படியோ இவருக்குத் தெரிந்தன. ஊதியங்தேடும் வழிகளெல்லாம் இவருக்குத்தோன்றின; வியாபாரிகளிடம் அவர்களுக்கு இடந்தரார்தபடி பேசும் வன்மை இவருக்கு வாய்ந்தது.

'மீன்பெற்ற
குஞ்சுக்கார் கற்றுக் கொடுத்தார்நீச் சம்புளியம்
பிஞ்சுக் கார்தாம் புளிப்பைப் பெய்திட்டார்-மிஞ்சிவரும்

காட்டுப் புலிக்குக் கடுஞ் சினமும்.........
ஆட்டுக்குப் பாய்ச்சலுங் தற் ருர்கொடுத்தார்'

என்றபடி வியாபார சாமர்த்தியம் இவருக்கு ஒருவரும் கற்பிக்கவேண்டாது இயல்பினமைந் திருந்தது.

கோடை.

'கனமோ கனமே விற்றில்லை
கறுந்து மிடைத்து முதவுதலாற்
சன்னன் கொடையோ புறஞ்சுவரைக்
கவினக் கோலம் புனைந்ததே.
முனமோ கனமோ முதலிசையின்
முன்னு மியலி னுடகத்தின்
மொழிப லுற்ற வள்ளன்மை
முற்று பாரி முதபேகன்
மனமோ கனமோ மன்னினரால்
வரிசை யறியார் வாயின் சொல்
வழங்கி முகமு மலர்ந்தகமே
வயங்கி வரிசை யறிதியால்'

என்றபடி மேகத்தின் கொடைக்கும்; கன்னன், பாரி, பேகன் முதலியோர் கொடைக்குங் குற்றமுண்டு.

'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு' எனவும்

'மாரியை நோக்கிக் கைம்மாறி யற்றுமோ
வையமென்ருன்' எனவும்,

'வான்செய்த நன்றிக்கு வையகமென் செய்யுமதை
மறந்திடாதே' எனவும்

பெரியார் மேகத்தின் கொடையைச் சிறப்பித்துக் கூறினுரேனும் அது மழைநீரை உலகிற்குபகரிக்

கும்போது கறுத்து, பயங்கரமான இடி இடித்து உப கரித்தலின் அதன் கொடைக்குங் குற்றமுண்டென்பர்.

'கன்னற்குப் பின் கொடையில்லை
கார்த்திகைக்குப்பின் மழையில்லை'

என்னும் பழமொழி கன்னன் கொடையின் மேன்மை கூறுமேனும் அவன் துட்டனாகிய துரியோதனனோடு நட்புக்கொண்டு அவன் செய்த கெட்ட காரியங்களெல்லாம் அவனுடனிருந்துதவி அவன் சென்ற கெட்ட வழிகளெல்லாந் தானுஞ் சென்றமையின், அவனுக்கு உளத்தூய்மையில்லை; ஆகலின் அவன் கொடை உட்சுவர் உளுத்திருக்கவும் வெளிச் சுவருக்கு வெண் சுதை தீட்டி அழகு செய்தலை யொக்குமென அதற்குங் குற்றங்காண்பர். முல்லைக்குத் தேரும், மயிலுக்குப் போர்வையுந் தந்த பாரி, பேகன் ஆகிய வள்ளல்களும் ஏற்பார் தகுதியறிந்து தாராமையின் அவர்கள் கொடைக்குங் குற்றங் கூறுவர்.

முத்தையா செட்டியாரவர்களோ இரவலர்க்கு வழங்குகையில் முகமலர்ந்து அகமலர்ந்து இன்மொழி விண்டு நன்மணங்கொண்டு அவரவர் தகுதிக்கேற்ப வழங்குவார்கள்.

'பூத்திருந்த மகமலர்ச்சி முகமலர்ந்து
மீத்தெரிப்பப் புடையொன் றில்லா
நாத்திருந்த மின்னுரைகள் வழங்கலீந்
தின்முகத்தை நாடு கின்ற
பாத்திருந்த மியல்பினன்முத் தையனிது
செய்வித்தான் பாரி னீடு
மாத்திருந்த நன்மக்கட் பேறுநீஇ
மகிழ்ந்தினிது வாழ்க மாதோ.'

என்றதூஉம் இதுபற்றியன்றோ? அன்றியும்,

'பரிந்துநின் வலக்கை
தருவதொன் றிடக்கை தானறி யாதே
யிடக்கையி னுள்ளதை யேற்றமார் வலக்கையின்
மாற்றியீ வதற்குண் மனமது மாறுமோ
வென்றிடக் கையினு மீந்தரு ளுவையே

என்பதற்கொப்ப, நமது முத்தையா செட்டியாரவர்கள் தானஞ் செய்கையிற் பலரும் அறியும்படி செய்யாது ஒருவருமறியாதபடி மறைவிற் செய்வார்கள்; தாமதியாது குறிப்பறிந்து வரிசையறிந்து உடனே செய்வார்கள். ஒருகால் இவர்கள் பூர்விகருடைய குணம் இவர்கள்பால் வெளியிடப்பட்டது போலும். இவர்கள் பூர்விகராகிய காவிரிப்பூம்பட்டினத்து வணிகரைப்பற்றி

'ஈட்டியதெல்லா மிதன்பொருட் டென்பதே
சாட்டிய கைவண்மை காட்டினர்—வேட்டொருங்
காமருதார்ச் சென்னிக் கடல்சூழ் புகார் வணிகர்
தாவரையுஞ் சங்கும்போற் றந்து'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் கருத்து: [சங்கநிதி, பத்மநிதிகள் வேண்டுவார் வேண்டுவனவெல்லாந்தரும் வன்மையொன்றைத் தாராது மற்றெதனை வேண்டினுந் தருமாறு காவிரிப்பூம் பட்டினத்து வணிகர் முதற்பொருளொன்றைத் தாராது ஊதியத்திலெவ்வளவேனுந் தருவரென்பதாம்].

முகக்கோணலென்பது இவர்களுக்கு எக்காலத்தும் எக்காரணம் பற்றியேனும் உண்டானதில்லை. இவர் சினந்து நின்றநிலையில் இவர்களைக் கண்டாரொருவருமில்லை. இவர்களது சாமர்த்தியமும்,

கொடைக்குணமும் பிறவும் ஒருபுறமிருக்க, இவர்க ளிடம் மிக்குத் தோன்றிய குணம் ஒன்று, அஃதாவது இவர்கள் தந்தை தாயர்களிடம் வைத்த அசாதாரண நேயம். இவர்கள் அன்னை அத்தர்களைத் தெய்வமாக நினைப்பதன்றி மக்களாக நினைத்தாரில்லை. 'அன்னை யும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் அவ்வை பிராட்டியார் அமுதவாக்கின்படி ஒரு சிறிதுந் தவறுத லின்றி நின்றவர். யாங்கண்டவரையில் இவரே என்று ஒருகால், இருகால், முக்காலுஞ் சொல்வேன். இவர் கள் அம்மையப்பர் வாக்கிற்கு விரோதமாக அவர்கள் அறியவேனும் அறியாமலேனும் நடந்ததில்லையெனத் தெரிகிறது. இவர்கள் மாதாபிதாக்கள் சொல்லை ஒரு நாளும் தட்டிப்பேசியும் இருப்பார்களோ? நியாயத் தின் ஒரு சிறிது விலகியிருப்பினும் ஒட்டியே பேசு வார்கள்; வெட்டிப் பேசினார்களென்பது என்று மில்லை. அதன்மேலும் மகனொருவன் பெற்றோர்க் குச் செய்யவேண்டிய கடமைகளொன்றினும் இவர் கள் வழுவினார்களில்லை. தமது பெற்றோர் பணியாட் கள் தொழில் செய்ய மனம் பொறார்கள்; தாமே அவர்களுக்கு எல்லா வூழியமுஞ் செய்வார்கள். கௌ சிகனென்னும் அந்தணன் பன்னெடுநாள் காத்திருந்து ஒரு வேடன்பாற்பெற்ற உபதேசத்தாலறிந்த உண் மை இவர்கள் ஒருவரும் உபதேசியாமலே அறிந் தமை அத்தியாச்சரியத்தை விளைக்கின்றது.

---

* கௌசிகனென்னும் ஒரு பார்ப்பான் வசிட்டபுரத்தி லுள்ளதோரில்லம்புக்குப் பிச்சை கேட்க அவ்வில்லத்திற் குரிய அம்மையார் தமது கணவன் பணியைக் குறைவறச்

இவர்களது நற்குண நற்செய்கைகளையும் மதி
நுட்பஞ்சாமர்த்திய முதலியவற்றையுங்கண்டு செட்டி
யாரவர்கள் மனம் பூரிப்பார்கள். செட்டியாரவர்கள்
உள்ளபோதே மைந்தரைப்பற்றி 'இவன் றந்தை, யென்
னோற்றான் கொல்' லெனுஞ் சொல் எங்கெங்கும் பிறந்

---

செய்து முடித்துப் பின்னர்ப் பிச்சைகொண்டுவர அப்பார்ப்
பான் சினந்து அவ்வம்மையாரையுற்று நோக்க, அவ்வம்மை
யார் 'கொக்கென்று கொண்டனையோ' என, அப்பார்ப்பான்
தான் கொக்கை எறிந்த செய்தி தனக்கேயன்றி பிறரொருவ
ருக்குந் தெரியாதிருக்கவும் இவ்வம்மையாரறிந்தபடி
யாதோவென ஐயங்கொண்டு அச்சமுற்று நிற்க, அவ்
வம்மையார் அப்பார்ப்பானுக்கு கற்பியலையும், கற்பின்
பெருமையையும் விளக்கிக் கூறியதோடு பல நீதிகளையும்
எடுத்துச்சொல்லி 'ஐயரே! நீர் மிதிலாபுரியில் வாழ்கின்ற
சத்திய வியாதனென்னும் வேடனிடஞ் செல்க, அவனால்
உமக்குத் தெளிவு பிறக்கும்; நீர் கடைத்தேற நேரும்;
உமது சன்மம் சபலமாம்' என அப்பார்ப்பான் அவ்வாறே
மிதிலாபுரி சென்று வேடனைக் கண்டனன். ஊன்விலை
பகர்தலையே உத்யோகமாகக் கொண்ட அவ்வேடன்பால்
பன்னெடுங்காலங் காத்திருந்தனன். அதன் பின் ஒருநாள்
அக்கிராதன் அவனைக் கண்ணெடுத்து நோக்கி 'யார், ஐயா?
நீர்? ஏன் இங்கு வந்தீர்? உமக்கிங்கென்னிடம் என்ன
காரிய' மென்ன, அதற்குப் பார்ப்பான் நடந்த செய்தியைத்
தெரிவிக்க, அவன் 'பெற்றோர்க்கு ஏவல் செய்வதைக் காட்
டிற் பெரிய தோரறமில்லை. யானறிந்த அறம் இஃதொன்
றே. யான் அதன்படி நடப்பேன், காண்க' என்றுரைத்து
அவ்வாறு நடந்து காட்டினன். பார்ப்பானும் அவன் உப
தேசத்தைக்கேட்டு ஒழுக்கத்தைக் கண்டு உயிர்க்குறுதி
யறிந்துய்ந்தனன்.

தது. இவர்களது தாயாரும் தமது புத்திரன் பெருமை யை பல அறிஞர்கள் சொல்லக்கேட்டு,

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக் கேட்ட தாய்'

என்றபடி பெற்றபோதினும் பெரிது மகிழ்ந்தார்கள்

சமீபகாலத்தில் நடந்த ஐரோப்பிய மாப்பெரும் போர்ச் சமயத்தில் நமது தேசத்தில் செவ்வையான விளைவின்மையாற் செல்வர்களும் வறியர்களும் நெல் லும் அரிசியும் பெறாது வருந்தியதறிந்த முத்தையா செட்டியாரவர்கள் மனமிரங்கித் தங்கள் களஞ்சியத் திலிருந்த நென் முழுவதும் குறைந்த விலைக்கு விற் றும், இரங்கூன் முதலிய விடங்களிலிருந்து அரிசி யைப் பெருவாரியாகத் தருவித்துக் கொண்ட விலைக் குஞ் சிலசமயங்களில் கொண்ட விலைக்குக் குறைந்த விலைக்கும் விற்றுங் காலத்திற்செய்த பேருதவியைக் கண்டுஇவர்களைப் புகழ்தாரில்லை. இவர்களது குணம், செய்கை முதலியவற்றை நன்கறிந்த புதுக்கோட்டை அரசராகிய ஹிஸ், ஐனஸ், ஸ்ரீ பிரகதம்பா தாஸ், ராஜா, சர். மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் பகதூர் ஜீ. ஸி. ஐ இ. (G. C. I. E.) அவர்கள் நியாய ஸ்தலங்கட்கு இனி முத்தையா செட்டியாரவர்கள் நேரில் வரவேண்டாமென்று கட்டளையிட்டு அக்கௌ ரவ சுதந்திரத்தை இவர்களுக்குத் தாங்கள் அளித் ததைப்பற்றி எங்கும் பிரசித்தமுஞ் செய்தார்கள். புதுக்கோட்டை ராஜ்யத்தில் இவர்களுக்கு நன்கு மதிப்புஞ் செல்வாக்கும் உண்டாயின. ஷை புதுக் கோட்டை மன்னர் பிரானுக்கு 1913-ஷ நடந்த

இருபதாம் ஆண்டின் கொண்டாட்டத்தில் (Silver Jubilee) நமது முத்தையா செட்டியாரவர்களைப் பிர தான சமஸ்தான ராஜ உரிமை நேயர்களிலொருவ ராகத் தெரிந்தெடுத்ததோடு கௌரவமாய் வெடி குண்டு கருவியை 'உரிமைப்பத்திரம்' இன்றியே வைத் திருக்கும் உரிமையும் அளித்தார்கள். நமது சரிதத் தலைவராகிய செட்டியாரவர்கள் தமையன் குமாரரும் திருப்பாதிரிப்புலியூர் தேவஸ்தான தர்மகர்த்தரு மாகியதிருவாளர் தீ.சொ.முரு. முருகப்ப செட்டியா ரவர்கள் தேகவியோகமடைந்தபின்னர் ஷை தேவஸ் தானகாரிய நிர்வாக சபையாரும் ஊர்ச்சனங்களும் ஒரு சேரத் தாங்களாகவே முத்தையா செட்டியாரவர்களை ஷை தேவஸ்தான தர்மகர்த்தரிலொருவராக நியமித் தனர். திருக்கோவலூராதீன கர்த்தராகிய திருப்பா திரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவா சாரிய சுவாமிகள் தம் ஊருக்கு எழுந்தருளியபோது இவர்கள் சுவாமிகளுக்கு பேரன்பொடு செய்த உப சாரங்களையுஞ் சமர்ப்பித்த பெருந் தொகையான காணிக்கையையும் கண்டவர் யாவரும் கொண்டாடிப் பேசினர்.



# அத்தியாயம் 19.

---

## விவசாய விருத்தி.



இவர்கள் நாடுகளில் நீர்வளம், நிலவளம் பொருந்திய நன்செய், புன்செய், நிலங்களுள்ள கிராமங்களை வாங்கவெண்ணி அத்தகைய நிலங்களை வாய்த்தபோதெல்லாம் வாங்கினார்கள். அடிக்கடி தாங்கள் கிராமத்திற்குப் போகாமலே நூதன முறைப்படி காலங்களில் உழுது, எருவிட்டு, நீர்பாய்ச்சி, நடவு நட்டு, களைகளைந்து வேண்டியவெல்லாஞ் செய்தற்குரிய ஏற்பாடுகள் செய்தார்கள். புதுப்பட்டி கிராமம் இவர்களுடைய பழைய கிராமம்.

இவர்கள் வாங்கின கிராமங்களாவன:—

(1) திருமயம் பிரிவு (தாலூகா) தேர்க்காட்டூர் வட்டம், கீழத்தே முத்துப்பட்டிகிராமம் ஒன்றுவது. இதன்கண் 45000 ரூபாய் வரை செலவு செய்து ஒரு பெரிய கட்டிடங்கட்டி அதனுள் திருநாவுக்கரசு தண்ணீர்ப்பந்தர், தருமபாடசாலை, சாதுக்களுககுச் சிற்றுண்டி முதலிய தருமங்கள் நடத்திவரப்படுகின்றன.

(2) கீரனூர்பிரிவு (தாலூகா) பெருமாநாடுவட்டம், சேந்தமங்கலங் கிராமம் இரண்டாவது. இதன்கட் பூர்வீகமான பெரிய விடுதியொன்றிருக்கிறது. அக்கிராமத்தின்கணுள்ள பெருமாள்கோயில், சிவன் கோயில், பிடாரி கோயில், அநுமார் கோயில், தேவர்

* பெருமிழலைக் குறும்பநாயனர் குறிப்பை யறிந்து கோயின் முதலியவற்றிற்கு நாடோறும் பூசைகள் சிறப்புடன் நடந்துவரும்படி ஏற்பாடுசெய்து வைத்திருக்கின்றார்கள்.

(3) கீரனூர் பிரிவு (தாலூகா) திருவெங்கைவாசல் வட்டம், பெருஞ்சுனை, ஆமம்பட்டி, மாணிக்கம்பட்டி, பிடாரம்பட்டி, மதிப்பாவயல், இறைஞ்சான் வயல் கிராமங்கள் மூன்றுவது. இவ்வட்டத்திலும் பழைய விடுதி ஒன்றிருக்கிறது. பெருமாள் கோயில், பிடாரி கோயில் திருப்பணிகளையும் புதிதாய்ச் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். நித்திய பூசை

---

* பெருமிழலைக குறும்ப நாயனாரென்பார் மிழலை நாட்டின்கணுள்ள பெருமழலையிற் சிவனடியார்களைக் கண்டவளவில் ஆவினைக்கண்ட இளங்கன்றுபோல எதிர்கொண்டோடி அழைத்து வந்து அவர்கள் திருவுள்ளக் குறிப்பையறிந்து பணிசெய்து திருவமுது அருத்தி அவர்களுக்கு வேண்டிய பொருள்களை அளிப்பார். இங்ஙனம் சிவனடியார் திருத்தொண்டு செய்துவருங்கால் சுந்தரமூர்த்தி சுவாமிகளை வாழ்த்தி வணங்கி இடைவிடாது நினைத்தலே உய்யுநெறியெனக் கருதி அவ்வாறே செய்துவந்து அதன் பயனாக அட்டமா சித்திகளை யடைந்து அஞ்செழுத் தோதுவாராயினர். ஒருநாள் திருவஞ்சைக் களத்திற் சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் திருவருளான் வடகயிலையெய்தும் பெருவாழ்வு பெற நின்றதை யோகத்தால் அறிந்து 'வன்றொண்டப் பெருமானர் நாளை வடகயிலை அடைபவராக, யான் அவரைப்பிரிந்து கண்ணிழந்து வாழும் குருடரைப் போல வாழேன், இன்றே சிவனடி சேர்வேன்' என்று யோக முயற்சியாற் பிரமரந்திரம் திறக்கப்பெற்றுச் சிவனடி நீழலடைந்தார்.

வகைகளும் நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வைத்திருக்கிறார்கள்.

புதுக்கோட்டை சமஸ்தானத்தில் விவசாயக் கிராமத்தலைவர்களின் முதன்மை பெற்றவர்கள் இவர்களே யாவர். இவர்கள் கிராமங்கள் செழுமையாகவே இருக்கின்றன.

நமது சரித்திரத் தலைவர் வியாபாரமொன்றிற்றான் நிபுணரேயோ? விவசாயத்தும் அவர்களுக்கு மிக்க சாமர்த்தியமுண்டு. அவர்கள் விவசாய நூதன முறைகளை எப்படி அறிந்தாரோ தெரியவில்லை. ஜன்மாந்தர ஸம்ஸ்கார முண்டென்றே கொள்ளக்கிடக்கிறது. அவர்கள் 1919-ஆண்டில் திருப்பாதிரிப்புலியூரில் நடைபெற்ற ஸ்ரீ பாடலேசுவர சுவாமிகள் வெள்ளித் தேர்த் திருவிழாவிற்குச் சென்றிருந்தபோது அங்குள்ள தமது அன்னசத்திரக் கிராமமாகிய வானமாதேவிக் கிராமத்தில் அச்சமயம் கார் நடவு நடுங்காலமாயிருந்தமையான் அப்படி கிராமம் கிருஷிகளை யழைத்து கார் நடவு உரத்திற்காக வயலிற் போடப்பட்டிருக்கும் அவுரிக் குழையில் வேண்டிய வளவு தண்ணீர் கட்டி அஃதி குழைச்சத்து முழுவதும் அவ்வயலிலேயே சுவறுமாறு செய்யவேண்டுமென்றும், அங்ஙனஞ்செய்யாது அதிகத் தண்ணீர் கட்டின் அஷி குழையின் சத்து வெளிச்சென்று வாய்க்காலிலோடுகின்ற தண்ணீரொடு செல்லுமென்றும் உரைத்தார்கள். இவர்கள் விவசாய சாமர்த்தியத்தைக்கண்ட இராஜாங்கத்தாரால் அதைக்குறித்து இவர்களுக்கு நற்சாட்சிப்பத்திரமும் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒருகால் தமது வீட்டின் மேற்பக்கத்திலுள்ள களஞ்சிப்

கட்டில் தாமே நெல் தானியத்தைக் காத்துக்கொண்டிருந்தார்கள். செட்டியாரவர்கள் கிராமங்களிலிருந்து ஆண்டுதோறும் ஏராளமாக வரும் நெல்லைப் பெரிய வியாபாரிகளிடம் விற்றால், அந்நெல்லான் மிக்க இலாபம்பெற உத்தேசித்து அதிக விலைவைத்து விற்று ஏழைகளைத் துன்பத்திற் குள்ளாக்குவார்களெனக் கொண்டு * ஏலேல சிங்கஞ் செட்டியார்போலத் தங்கள் தேகப்பிரயாசத்தையும் காலத்தினருமையையும்

---

* ஏலேல சிங்கஞ் செட்டியாரென்னும் வைசியோத்தமர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார்க்கு நண்பரும் மாணவருமாக இருந்தவர். ஒருகால் நாட்டில் மழைவளங் குன்றி வற்கடஞ் சென்ற வழிப் பொருளாளராகிய நாயனார் ஏலேல சிங்கஞ் செட்டியாரை நோக்கி, 'அன்புடையீர்! உம்மிடத்துள்ள நெல் எல்லாவற்றையும் கடைவிலைக்குக் குறைய விற்க' எனக்கட்டளையிட அவர் நாயனார் சொற்படி அங்ஙனமே மிகக்குறைந்த விலைக்கு விற்றும் நெற் களஞ்சியம் குறையாது வளர்ந்தோங்கிற்று. பஞ்ச முடிவில் நெல் விற்ற தொகையைக் கணக்கிட அக்கால விலைக்கு மேற்பட இலாபம் வந்திருக்கக்கண்டு அதனைத் தமது குருநாதர்க்கறிவிக்க அவர் 'அதிக இலாபத்திற்குப் பொன்கொண்டு அதை ஒரு கட்டியாகச்செய்து உமதுபெயரை அதன்மேற் றீட்டிக் கடலினுள் உய்க்க' வெனச் செட்டியா ரவ்வாறே செய்தனர். நெடுங்காலஞ் சென்றபின்னர் வலைஞனொருவன் ஒருநாள் வலைவீசியவழி ஒரு பெரிய மீனகப்பட்டது. அதுபாரமாயிருத்தல் கண்டு அதனை அரிந்து அதனுள்பொற் கட்டியிருக்க, அப்பொன்கட்டி பாசி மூடியிருந்தமையின் கருங்கல்லெனக்கொண்டு, வியந்து செட்டியார் வீட்டிற்கு ஓடிவந்து, நிகழ்ந்ததை அறிவித்து அங்குக் கொணர்ந்திட, அவரும் அதனைக் கல்லென்றே கொண்டு தமது வீட்டின்

பொருட் படுத்தாமல் தாங்களே நேரில் வேலையாட்களைக்கொண்டு நெல்லைத் தூற்றிக் காயவைத்து ஏழைகளுக்குக் குறைந்தவிலைக்கு உள்ளூர் பிறவூர்ச் சந்தைகளிலும், புதுக்கோட்டை முதலிய பெரிய நகரங்களிலும் விற்றுப் பேருதவி செய்து வந்தார்கள். அப்படியே இன்றும் நடந்து வருகிறது.



---

புறக்கடையில் சோமனடிக்குங் கல்லாக உபயோகித்தனர். நாளேற ஏறச் சோமனடிக்குந்தோறும் அடிக்குந்தோறும் பாசி சிறிது சிறிதாக நீங்கி ஒளி வீசுதல் நோக்கி ஏவலாளர்கள் செட்டியாருக்கு அதைத் தெரிவிக்க அவர்வந்து கண்டு அதன் மேற் றமது பெயர் வரைந்திருத்தலை அறிந்து வியப்புக்கொண்டு தம்து குருநாதருக்கு அதனை விண்ணப்பிக்க, அவர் 'ஏலேல சிங்கம் பொருள் எழுகடல் செல்லினும் வரும்' என, அத்திருவாக்கைக் கேட்டுப் பெருமகிழ்வெய்தினர். பின்னர்த் தமக்கு மகப்பேறில்லாக் குறையைக் குருநாதர்பாற் கூறி அவரது அனுக்கிரகத்தால் ஆண் மகப்பெற்று அகங்குளிர்ந்து அஷ்டைஸ்வரிய சம்பன்னராய் நெடுங்காலம் இனிது வாழ்ந்திருந்து ஈசனிணையடி நீழலையடைந்தார்.

## அத்தியாயம் 20.

### உமையம்மையார் காலஞ்சென்றமை.

தமது மகனுர்க்கு மகப்பேறில்லையென்னு மொரு மனக்குறை யொழிய பிறிதொரு மனக்குறையின்றி வாழ்ந்த செட்டியாரவர்கள் மனைவியாராகிய சௌபாக்கியவதி உமையம்மையார் தமக்கு எழுபத்தொன்ருவது ஆண்டு நடப்புழி அஃதாவது பிங்கள-ஹு பங்குனி-மீ 26வ செவ்வாய்க்கிழமை யன்றிரவு 3 மணிக்குச் சிவனடி நீழலடைந்தனர். பல ஆண்டுகள் பெருவாழ்வெய்தி இருந்து சுமங்கலையாய்ப் பொல்லா நிலத்தை நீத்துப் புண்ணியனடி நீழல் புகுந்தது வாயாத வாய்ப்பே. புத்திரராகிய முத்தையா செட்டியாரவர்கள் அன்பு நிறைந்த அன்னையர்க்குச் செய்யவேண்டிய கிரியைகளையெல்லாம் மிக்க பொருட்செலவிற் சிரத்தையுடன் செய்து முடித்தார்கள்.



## அத்தியாயம் 21.

### தமையன் மகனர் காலஞ்சென்றமை.

செட்டியாரவர்கள் தமையனர் சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் குமாரரும், திருப்பாதிரிப்புலியூர், திருவண்ணுமலை தேவஸ்தானங்களின் தருமகர்த்தரும், தென்னுற்காட்டு ஜில்லாவின் றலைநகராகிய மஞ்சகுப்ப நகர்ப்பரிபாலன சங்கத்து அங்கத்தினரும், 63 வயதுள்ளவருமாகிய முருகப்ப செட்டியாரவர்கள் துன்மதி-ஹு வைகாசி-மீ 6உ இரவு பதினெரு மணிக்கு சிவனடிப் பேறெய்தினர்கள்.

முருகப்ப செட்டியாரவர்கள் உயிர் பிரியும்போது அவர்கள் நெருங்கிய உறவினருட் சிலர் திருப்பாதிரிப் புலியூர் திருவிழாவிற்குச் செல்லப்புறப்பட்டு சத்திரத்திற் றங்கி மறுநாட் காலை போகலாமென்று இரவு $10\frac{1}{2}$-மணிக்குக் கீழத்தே முத்துப்பட்டிச் சத்திரத்திற் றங்கினர்கள். அவர்களோடு வந்திருந்த 6 வயதுள்ளதொரு பெண்ணிற்கு உணவு கொடுக்கையில் நித்திரையினின் றெழுப்பப்பட்ட அப்பெண், காரணமின்றியே, 'ஐயா (பாட்டனர்) நமது ஊரில் இறந்தார்களே' என்றது. சிறிது நேரத்திற்கெல்லாம் ஊரிலிருந்து அச்செய்தி கூறி அவர்களை அழைத்துப் போக ஓராள் வாயுசார ரதத் (Motor Car) தொடு வந்தான். செய்தி தெரிந்ததுஞ் சத்திரத்திற் றங்கி

இருந்தவர்கள் உடனே அவ்வர்யுசாரரதமேறி ஊருக குத் திரும்பிச்சென்றூர்கள். அன்றே திருப்பாதிரிப் புலியூரில் நடந்த உற்சவத்தில் உற்சவ விக்கிரகத்தின் முன்னிருந்த விளக்கினின்று தீப்பிடித்ததாகவும் அதை இவர்கள் தம்பியும் மகனும் பெண்பிள்ளை களுங் கண்டு கலங்கி மிக்க பிரயாசத்துடன் அணைக்க ஏற்பாடு செய்ததாகவுஞ் சொல்லுகிறூர்கள். என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்!!

இவரும் நமது செட்டியாரவர்களும் இளமை முதற்கொண்டே மனமொத்து, குணமொத்து, அந் யோந்யமாய்ப் பழகி வந்தார்கள். வியவகார திசைக்கு வந்தபின் நமது செட்டியாரவர்கள் மூல விக்கிரகம் போல வீட்டிலிருந்துகொண்டு கடைக் காரியங்களைக் கவனித்துவர, முருகப்ப செட்டியாரவர்கள் உற்சவ விக்கிரகம்போல அடிக்கடி வெளியூர்களுக்குச் சென்று பற்பல காரியங்களையும் நேரிற் கண்காணித் தும், நன்கு கவனித்தும், கூட்டாளி முதலியவர்களைத் தெரிந்தெடுத்தும் வருவார்கள். நாட்டுக்கோட்டை நகரங்களில் முருகப்ப செட்டியாரவர்களை யறியார்தார் மிகச்சிலரே யாவர். அவர்களுக்கு சமயோசிதமாக வும் நயமாகவும் பேசுந்திறமையுண்டு. இவ்விருவரும் காரியங்களைப் பகிர்ந்துகொண்டு ஒற்றுமையோடு நெடுங்காலம் நடத்திவந்தார்கள். ஒரு நாளேனும் ஒரு வியவகாரத்திலேனும் அவர்களிருவருக்குள் அபிப்பிராயபேதமிருந்ததில்லை. பெரும்பாலும் ஒரு வர்க்கு உதிக்கும் எண்ணமே மற்றவர்க்கும் ஒரே நேரத்தில் உதிக்கும். ஒருவர் யோசனை மற்றவர்க்கு

யுக்தமாகத் தோன்றுமேயன்றி அயுக்தமாக ஒருநாளுந்தோன்றியதில்லை. இப்பெரியாரிருவரும் இரண்டு மாதங்களுக்குள் மாரணமடைந்ததே இவர்களுடைய நேயத்தினளவை நன்கு விளக்குகிறது. முருகப்ப செட்டியாரவர்கள் முன்னர்த் தேகவியோகமடைந்தனராயினும் அவர் நடத்தக் கருதியிருந்த சுப காரியங்களை நமது செட்டியாரவர்கள் குறைவற நடத்தினார்கள். இச்செய்கை அவர்கள் தமையனார் புத்திரர் மீது வைத்திருந்த உள்ளன்பையும் தமது பேருபகாரப் பெருந்தன்மையையும் இனிது தோற்றுவிக்கிறது. என்று மனைவியார் மரித்தார்களோ அன்று முதலே நமது செட்டியாரவர்கள் ஊக்கமிழந்து ஏக்கங் கொண்டார்கள். பழையபடி உண்டி கொள்வதில்லை. உறக்கங்கொள்வதில்லை. அதன்மேல் இப்போது முருகப்ப செட்டியாரை இழந்தமை இவர்கள் உடல் வலிமையையும் மனவலிமையையும் இழத்தற்கிடனாயிற்று. முருகப்ப செட்டியாரவர்கள்நிரியாண காலமுதற்கொண்டு இவர்களுக்குத் தேகாரோக்கியம் வரவரக் குறைந்தது; மனத்துயரம் வரவர மேலிட்டது.



## அத்தியாயம் 22.

### சரிதத்தலைவர் காலஞ்சென்றமை.

'இன்போ ரணுவா மிடரதற்கே மாமலையாம்
புன்போகம் வேண்டிப் புலம்பாதே—யென்போ
யுள்ள முருகவரு மொண்போரு ரையனருள் [டே
வெள்ளமுற நெஞ்சே விரும்பு'

எனப் பெரியார் அருளியபடி இப்பொல்லா நிலத்தின் கட் டுன்பம் மலையளவும் இன்பம் அணுவளவுமாம். அஃதெப்படியெனின் கூறுதும்.—

'ஆயுத ரந்தனிலேயும் பொழுதோ ரைம்பே ரிடராகு
மகிலத் துறுசிறு குழவிப் பருவத் தறியா மையினிடரா
மேய குமாரத் திடர்கா மத்தா லெழின்மனை சுதரெனவே
யேயும் பொழுதும் மிடர்பிணி யாலிட ரிலதா மிடிவந்தாற்
காயும் பசியா லிடர்பின் னரைதிரை காணுறு போதுமிடர்
கால னுதித்திடு போதுறு மிடரைக் கடவுணீயறிவாய்
மேய விடர்க்கடன் மூழ்கு மெனைச் சுகவேலையினீவைப்பாய்
யேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே.

என்றபடி தாயின் கருப்பத்தினின்று பிறக்கும்போது கருப்பையுறுத்தல் முதலியவற்றாற் றுன்பமும், சைசவபருவத்தில் அறியாமையாற் றுன்பமும், கௌமார பருவத்திற் காமத்தாலும் குடும்ப பாரத்தாலும் நோயாலும் பசியாலுந் துன்பமும், விருத்த பருவத்தில் உடைசரிந்து நடைமெலிந்து ஊண் அருது உறக்கம் வாராது பல் இழந்து பார்வை மங்கி எச்சிலும் ஈளையும் ஒழுகுதலாற் றுன்பமும், மரண காலத்திற் பொறி

கலங்கி நெறிமயங்கி நாவுலர்ந்து இருளடைந்து அறிவழிதலாலுஞ் சிலேஷ்டுமம் உந்துதலாலுந் துன்பமுமாம். ஆயினும், இத்தனை துன்பங்களுள் மரணகாலத்திற் றுன்பமொன்றே அளவுபடாதது; கற்பனைக் கடங்காதது. அப்படியிருக்கவும், அவ்வளவில்லாத துன்பத்தோடு கூடிய மரணகாலத்தில் ஈசனை நினைக்கவேண்டும். அவன் திருநாமஞ்செப்பவேண்டும். அங்ஙனம் அப்போது ஈசனை நினைத்து அவன் திருநாமத்தைச் செப்புவார்கட்கன்றிப் பிறர்க்கு வீடுபேறில்லை என்பது நூன் முடிவு. அதுபற்றியே பெரியோர்கள்

'ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவழிந்து
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவனி
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டுக் [யான்
கையுந் தொழப் பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே'
எனவும்,

'மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லாடும்போது
மதனெனும் பாறைதாக்கி மரியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே'
எனவும்,

அருளிச் செய்தார்கள்.

'சாவிற் காண்க சதுர்' என்கிற பழமொழியுமொன்றுண்டு. நல்லவர், கெட்டவர், நற்கதி புகுவார் தீக்கதி புகுவார் என்பது அப்போதுதான் தெரிகிறது.

திருவாளர் நாச்சியப்ப செட்டியாரவர்களாகிய நமது சரிதத்தலைவர் சிலநாள் தேகசுகமின்றியிருந்து துன்மதி-ஞு ஆடி-மீ 6வ (21—7—21) வியாழக்

கிழமை காலை $5\frac{1}{2}$ மணிக்குத் தமது அருமைப் புதல்வராகிய திருவாளர் முத்தையா செட்டியாரவர்கள் மடி மீது தலை சாய்ந்திருந்தபடியே இறைவனது திருநாமத்தை உச்சரித்து உடம்பு முழுவதும் திருநீறு பூசிக் கங்கா தீர்த்தத்தை உட்கொண்டு மரணாவஸ்தை என்பது ஒரு சிறிதுமின்றிச் சிவபெருமானது திவ்ய சரணாரவிந்தங்களை அடைந்தார்கள்.

இப்பெரியார் உயிர்பிரிந்த சமயஞ் சுப சகுனமாக வீட்டிலுள்ள ஆன் கன்றை ஈன்றது. அன்று முழுவதுஞ் சூரியன் பெருந்துயர் கொண்டவன்போல ஒளிமழுங்கி உலவினன். செட்டியாரவர்கள் இழவைக்குறித்து விண்ணவர்விட்ட கண்ணீர்போல மழைபெய்தது.

இச்சம்பவத்தைக் குறித்து அன்று பல முக்கிய தலங்களில் மோக்ஷ தீபங்கள் வைக்கப்பட்டன.

கங்கை முதலிய எழு புண்ணிய தீர்த்தங்களால் இவர்களது புண்ணிய சரீரம் அபிஷேகிக்கப் பெற்றது. இவர்களது சடலம் புஷ்ப விமானத்தின் மயானத்திற்குக் கொண்டுபோகப் பெற்றது. அக்காலை பொற்பூக்களும் நற்பூக்களும் சிறுமழைபோல வழிமுழுவதுந் தூவப்பெற்றன; பற்பல ஏழைகளுக்கு அன்னதானமும், செந்நெற்றானமும், சொர்ன தானமும், வஸ்திர தானமும் ஏராளமாகச் செய்யப் பெற்றன; தகனபூமியில் இந்தனத்திற்கு மாறாகச் சந்தனக் கட்டையும், வைக்கோற் போர்வைக்கு மாறாக வெட்டிவேர்ப் போர்வையும், பைந்தரைச் சேற்றிற்கு மாறாகச் சந்தனச்சேறும், தண்ணீருக்கு மாறாகப் பனிநீரும் உபயோகிக்கப் பெற்றன.

இப்பெரியார் தாம் இம்மாயா பிரபஞ்சத்தை நீத்தகன்ற நாட்கு முந்தியநாளிற் பரமாசாரிய சுவாமிகளாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூராளி, திருவாதவூரடிகள் என்னும் நால்வர் திருவாய் மலர்ந்த திருநெறித் தமிழ்மறைப் பாசுரங்களைத் தமது அருகிருந் தோதிவந்த மு. மாணிக்கவாசகமூர்த்தி என்னும் ஓதுவார், அமணர்கள் திருநாவுக்கரசு சுவாமிகளைக் கல்லிற் பிணித்துக் கடலிற் றள்ள அக்கல் நன்மிதவையாகச் சுவாமிகள் கரையேறிய மகிமை மிகுந்த மகா க்ஷேத்திரமாகிய திருப்பாதிரிப்புலியூரின்கண் சுவாமிகள் அருளிச்செய்த திருவிருத்தத்தை ஓதிவருகையில்,

'கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையே
னுருவாய்த் தெரிந் துன்றனாமம் பயின்றே னுனதருளாற்
றிருவாய்ப் பொலியச் சிவாயநம வென்று நீறணிந்தேன்
றருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரானே'

என்னும் திருவிருத்தத்தை ஓதியவுடன் அதனோடு நிறுத்திவைக்கும்படி செய்தார்கள்.

திருஞானசம்பந்த சுவாமிகளால் 'அப்பர்' என்கிற பெயரைப் பெறுமுன்னரே அப்புவின் மிதந்து வந்து 'அப்பர்' என்னும் அப்பெயர்க்குப் பிறிதொரு பொருளானுமுரிமைபெற்றுத் திருநாவுக்கரசு சுவாமிகள் கரையேறியதொரு திருத்தலத்திற் றிருக்கோயிற் றிருப்பணி முதலிய செய்தும், திருநாவுக்கரசு சுவாமிகள் நித்திய பூசைக்கும் திருவிழா முதலியவற்றிற்கும் மூலதனம் ஏராளமாக வைத்தும் திருநாவுக்கரசு சுவாமிகள் பேரால் 'தண்ணீர்ப்பந்தர்' அமைத்துஞ்

சுவாமிகள்பால் மிக்க அன்புகொண்டொழுகிய நமது செட்டியாரவர்கள் சுவாமிகளைப்போல 81-வது பிரா யத்திற் சிவானந்தப் பெருவாழ்வடைந்தனர்.



## அத்தியாயம் 23.

### பிற குறிப்பு.

தொண்டை நாட்டிற் பிறந்து பெரும் பொருள்தேடித் தமது காலத்தில் பலர்க்கு உபகாரியாயிருந்து நாட்டிற்குப் பல நன்மை செய்து, உன்னத பதவி பெற்றுத் தமது பொருண் முழுவதும் பல தர்மங்களுக்குப் பகிர்ந்து வைத்துப் பெரும்புகழ்பெற்ற மகாகனம் பொருந்திய திருவாளர் பச்சையப்ப முதலியாரவர்களைப் போன்ற தருமசீலர்கள் அவர்க்குப்பின் இல்லையென்று பலர் சொல்லுவர். சமீபகாலத்தில் இருபத்தைந்து நூறாயிரம் (25,00,000) ரூபாய் வரையும் நிலைபெற்று நிற்கக்கூடிய தருமங்களுக்கெனச் செலவு செய்த நமது செட்டியாரவர்கள் பெருங்கொடையைப்பற்றி அறியின், அவர் அங்ஙனஞ் சொல்லார். சென்னை ராஜதானியின் தலைநகரங்களுளொன்றாகிய சென்னை மா நகரத்திலும் அதற்கடுத்த காஞ்சி, சிதம்பரம் முதலிய நகரங்களினும், சைவப்பிள்ளைகளேயன்றிப் பலமதப் பிள்ளைகளும் பயிலும் பச்சையப்ப முதலியாரவர்கள் கலாசாலையும் பாடசாலைகளும் நன்கு நடைபெற்றுவருதலின் அவர்கள் வள்ளன்மை குன்றின்மேலிட்ட விளக்காயதுபோல திருப்பாதிரிப்புலியூர், திருவண்ணாமலை முதலிய சிவஸ்தலங்களில் திருப்பணி செய்தமையின் நாச்சியப்ப செட்டியாரவர்கள் வள்ளன்மையும் நானிலத்திலும் ஒளிர்தரு விளக்கா

யிற்று. செட்டியாரவர்களுக்குப்பின் அவர்கள் புத்திர ரத்தினமாகிய முத்தையா செட்டியாரவர்கள் ஏற்படுத்திய தருமங்கள் பலவற்று ளொன்றேனுஞ் சிறிதும் பழுதுறாது ஊக்கமும் உழைப்புங்கொண்டு கண்ணுங் கருத்துஞ் செலுத்தி அவைகளெல்லாவற்றையும் நன்கு நடத்திவருகிறார்கள்.

திருப்பாதிரிப்புலியூர்ப் பிரமோற்சவத்திற்குச் சென்று தரிசித்து வருகிறவர்கள் தொகை எண்ணிறந்ததாகும். முத்தையா செட்டியாரவர்கள் இரவில் நித்திரை செய்வார்களோ என்னமோ தெரியவில்லை. வைகறையிற் றுயிலெழுந்து, சௌசாதி முதன் முடித்து, நீராடி, அனுஷ்டான செபமுயன்று, சூரியோதயத்திற்குள் திருக்கோயில்புக்கு, அருகிருந்து பெருமானுக்கு அலங்காராதிகள் யாவும் அழகுபெறச் செய்வித்துக் காலத்திற் பெருமானை புறப்படுவித்துத் தாம் பெருமானுடன் மாடவீதி வலம்வருவார். மறுபடி இரவு உற்சவத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும் உடனிருந்து செய்து சுவாமியைக் காலத்திற் புறப்படுவித்து அப்போதும் சுவாமியொடு திருவீதி வலம்வந்து ஆலயத்தின் எழுந்தருள்வித்துச் செல்வார்கள். திருவிழாக்காலத்தில் அவர்கள் எடுத்துக் கொள்ளுங் கவலையும் உழைப்புங் கண்டவர் வியக்கத் தக்கனவேயாம். திருவிழா மிக்க விதரணையொடுஞ் சிறப்பொடும் நடத்தப்படுகிறது.

சென்ற சில நூற்றாண்டுகளாகத் தமிழ்ப் புலவரை ஆதரிப்பாரும், தமிழ் நூல் இயற்றுவிப்பாரும் அரியராயினர். பொய்யாமொழிப்புலவர் காலத்தும் புலவர் பரிசுபெறுதல் என்னும் பண்டை வழக்கு

ஒழிந்ததென்றுகூறி, அதற்கொரு சிறிய கதையுங் கூறுவர் பெரியோர்.

அக்கதை பின்வருவது :

பொய்யாமொழிப்புலவர் ஒரு பாண்டிய மன்னன் பாற் பரிசுபெறச் சென்றனர். அம்மன்னன் அவரை நோக்கிப் 'புலவீர்! இக்காலத்திற் றெய்வப் புலமை யுடையாருண்டோ?' என அவமதிப்பொடு வின வினன். அதற்கு அவர் 'அரசே! பண்டைநாளிலிருந் ததுபோல இந்நாளிற் புலவர்களைப் பரிபாலிக்கும் மன்னர்கள் இல்லையயன்றி, பண்டைகாலத்துப் புல வர்களைப் போன்ற தெய்விகப் புலவர்கள் இக்காலத்து முண்டு' என விடை பகர்ந்தார். உடனே அரசன் 'அத்தகைய புலமை உமக்குண்டோ?' என்றான். அதற்கு அவர் 'பரீக்ஷித்துக்காண்க' என்றார். அரசன் 'சங்கப்புலவர் வீற்றிருந்த பலகை பொற்றாமரைத் தீர்த்தத்தின் ஆழ்ந்துளது. அதைச் சிறிதுநேரம் மிதக்கும்படி நீர் செய்ய முடியுமோ?' என்றான். அவர் 'முடியு'மென்று கூறவே, அம்மன்னன் தன் பரிவாரங்களோடு பலரையுங் கூட்டிக்கொண்டு பொற் றாமரைத் தீர்த்தக் கரைவந்து சேர்ந்தனன். இச் செய்தி யறிந்த ஊராரும் ஒருங்குதிரண்டு வந்து அங்குச் சேர்ந்தார்கள். அப்போது பொய்யா மொழிப்புலவர் அங்கு வந்து நின்று,

'பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையெனினும்
பாவேந்த ருண்டென்னும் பான்மையாற்—கோவேந்தன்
மாற னறிய மதுராபுரித் தமிழோர்
வீற்றணையே சற்றே மித'

என்ற அக்கணமே அச்சங்கப் பலகை மிதந்து சிறிது நேரமிருந்து பழையபடி உட்புகுந்து மறைந்தது.

கண்டவர் யாவரும் அதிசயமடைந்தார்கள்; மன்னன் புலவரைப் புறக்கணித்தமைக்கு மனம்வருந்தி அவரை ஆடம்பரத்துடன் அழைத்துச்சென்று அரண்மனைபுக்கு அவரை நன்குபசரித்து அவர் சிந்தை நிறையப் பரிசளித்தனன்.

அது நிற்க. 'பிரபந்த நிர்மாணம்' என்பது சப்த சந்தானங்களு ளொன்றென்ப. பிரபந்த நிர்மாணமாவது: நூலியற்றலும் நூலியற்றுவித்தலுமாம். முன்னாளில், அநபாய சோழன், சடையப்ப முதலியார், சந்திரன் சுவர்க்கி, வரபதியாட்கொண்டான் முதலிய பல திருமகண் மைந்தர்கள் நூலியற்றுவித்து அழியாப்புகழ் பெற்றார்கள். இந்நாளில், நூலியற்றுவிப்பாரில்லை யென்றே பலர் எண்ணினர். சென்ற இரண்டாவது ஆண்டுத் திருவிழாவில் முத்தையா செட்டியாரவர்கள் 'ஸ்ரீ பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்' என்னும் பிரபந்தத்தை பிரம்ஹஸ்ரீ காரைக்குடி பால சுப்பிரமணிய ஐயரவர்களைக்கொண்டு இயற்றுவித்துக் கொணர, ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அதனை ஸ்ரீ பிருகந்நாயகி சந்நிதியின்க ணெழுந்தருளி அரங்கேற்றினார்கள்.

இப்படித் தருமங்களைக் காப்பதற்கும் வளர்ப்பதற்கும், பலவகைத் தானங்களைச் செய்வதற்கும், பரிசு முதலியவற்றை வழங்குதற்குமே கங்கணங்கட்டிக் கொண்டு நிற்கும் முத்தையா செட்டியாரவர்கள் அரோக திடகாத்திர முடையாராய் அன்பு நிறைந்த மனைவியாரொடு இன்புபெருக நன்மகப்பெற்று நீடூழி வாழ எல்லாம்வல்ல இறைவன் இன்னருள் புரிக.

